உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௮.] விஷு௵ புரட்டாசி௴ [பகுதி-௧௧.
Vol. 38. September — October 1941. No. 11.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. SHANMUGA RAJESWARA NAGANATHA SETHUPATHY AVL., and
Published by THIRU. NARAYANA IYENGAR at the Tamil Sangam Power Press,
No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩௮.] விஷு௵ புரட்டாசி௴ [பகுதி-௧௧.

Vol. 38. September — October 1941. No. 11.


## எண்ணலளவை


[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]


'கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே' (திருமந்திரம்.)

'எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு' (திருவள்ளுவப்பயன்.)

'எண்ணென்பது கணிதம்; அது கருவியும் செய்கையும் என இருவகைப்படும்; அவை ஏரம்பமுதலியநூல்களுட் காண்க,' எனத் திருவள்ளுவப்பயனுக்கு நல்லுரைகண்ட பேரறிஞராகிய பரிமேலழகர் கூறினர். ஏரம்பமுதலிய நூல்கள் வழக்கற்று வீழ்ந்தன. அங்ஙனமாதலின், இசையாராய்ச்சிக்கு வேண்டப்படுவவாகிய கணிதமுடிபுகளைப் பிறமொழிவாயிலாகப் பெறுதல் இன்றியமையாததாயிற்று. 'இசைக்கிரமம்' என்னும் பொருளுரையின் பிற்பகுதியினை எழுதுதற்குமுன் 'எண்ணலளவை' என்னும் இத் தலைப்பெயர்க்கீழ்க் கணிதமுடிபுகள்சிலவற்றைத் தொகுத்துக் கூறுவாம். இவை இசையொழிந்த பிற ஆராய்ச்சிக்கும் ஒருதலை பயன்படும் சீர்மைய.

வழக்கிலுள்ள எண்ணளவை பப்பத்து மடங்காகப் பெருகிச் செல்லுமியல்பினதாதலின் அதனைப் பதின்மரபு (Decimal Notation) எனல் பொருந்தும். ஒன்றுமுதற் பத்துவரையுமுள்ள எண்கள் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 என எழுதப்படுவ. இவ்விலக்கங்களை அராபிய இலக்கம் என்ப. தமிழிலக்கம் உளவாயினும், எழுதல் அச்சிடுதல் கணக்கியற்றல் என்னும் இவற்றிற்கு எளிதாம்நீர்மை நோக்கிப் பொதுவழக்கிலுள்ள அராபிய இலக்கங்களையே யாமும் வழங்குவாம்.

முதலில் நின்ற ஒன்பது எண்களை **முதலெண்** என்ப. முதலெண் ஒன்பதினையும் பதின்மடங்கு கொள்ளக்கிடைப்பன: பத்து, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது, தொண்ணூறு (10, 20, 30, 40, 50, 60, 70, 80, 90) ஆம். இவை தம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன நூறு, இருநூறு, முந்நூறு, நானூறு, ஐந்நூறு, அறுநூறு, எழுநூறு, எண்ணூறு, தொளாயிரம் (100, 200, 300, 400, 500, 600, 700, 800, 900) ஆம். இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஓராயிரம் (1000) முதல் ஒன்பதினாயிரம் (9000) வரை யென்பதும், இவை தம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருபதினாயிரம் (10000) முதல் தொண்ணூறாயிரம்வரை (90000)வரை யென்பதும், இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருநூறாயிரம் (100000) முதல் ஒன்பதுநூறாயிரம் (900000) வரை யென்பதும், இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருபதுநூறாயிரம் (1000000) முதல் தொண்ணூறுநூறாயிரம் (9000000) வரை யென்பதும் அறிதற்பால.

நூறுநூறாயிரம் கோடியெனப்படும். நூறாயிரத்தினை இலட்சம் என்பது வடநூல்வழக்கு. தமிழ்வழக்கின்படி 72465318 எழுகோடியே இருபத்துநான்குநூறாயிரத்து அறுபத்தையாயிரத்து முந்நூற்றுப்பதினெட்டு ஆகும். வடமொழிவழக்கினைப் பின்பற்றி

'நூறுயிரத்து' என்பதை நீக்கி 'இலட்சத்து' என்பதைப் பெய்து கொள்ளின், மேற்காட்டிய எண் ஏழுகோடியே இருபத்துநான்கு இலட்சத்து அறுபத்தையாயிரத்து முந்நூற்றுப்பதினெட்டு என வாசிக்கப்படும். 'கோடி' எட்டாந்தானத்தது. இதனைநோக்கிப் போலும் 'ஏகமெண் மடங்கு கொண்டது கோடி' எனப் பிங்கல நிகண்டுகூறும். ஏகம் முதற்றானம்; பத்து இரண்டாந்தானம்; பத்தினை இருபடிவைத்துப் பெருக்கிப்பெற்றநூறு மூன்றாந்தானம்; பத்தினை முப்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற ஆயிரம் நான்காந் தானம்; பத்தினை நாற்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற பதினாயிரம் ஐந்தாந்தானம்; பத்தினை ஐம்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற இலட்சம் ஆறாந்தானம்; பத்தினை அறுபடிவைத்துப் பெருக்கிப் பெற்ற பத்திலட்சம் ஏழாந்தானம்; பத்தினை எழுபடிவைத்துப் பெருக்கிப்பெற்ற கோடி எட்டாந்தானம் என அறிக. இத்தனை படியென்பதைக் குறிக்கும் எண்ணை வலப்புறத்தில் மிதத்தி எழுது தல் மரபு. = என்பது சமன்குறி, சமன் என வாசிக்கப்படும்.

$$10^1 = 10$$
$$10^2 = 100$$
$$10^3 = 1000$$
$$10^4 = 10000$$
$$10^5 = 100000$$
$$10^6 = 1000000$$
$$10^7 = 10000000$$

பத்து ஒருபடி சமன்பத்து; பத்து இருப்டி சமன்நூறு; பத்து முப்படி சமன் ஆயிரம்; பிறவும் இப்படியே. வலப்புறத்தில் மிதத்தியெழுதிய எண்ணினைப் 'படியெண்' என்பாம்.

கோடிகோடி சங்கம் எனப்படும். கோடி, பத்துக்கோடி, நூறு கோடி, ஆயிரகோடி, பதினாயிரகோடி, இலட்சகோடி, பத்திலட்ச கோடி, சங்கம். முதல் கடை யிரண்டும் உள்பட எட்டுப்பெயர்கள் உள. இதனை நோக்கிப்போலும் 'கோடி யெண்மடங்கு கொண்டது சங்கம்' எனப் பிங்கலநிகண்டுகூறும். கோடி $10^7$ ஆதலின், கோடி கோடியாகிய சங்கம் $10^{14}$ ஆகும். இவ்வெண் பதினைந்துதானத்தது.

'சங்கமெண் மடங்கு கொண்டது விந்தம்'

'விந்தமெண் மடங்கு கொண்டது குமுதம்'

'குமுதமெண் மடங்கு கொண்டது பதுமம்'

'பதுமமெண் மடங்கு கொண்டது நாடு'

'நாடெண்மடங்கு கொண்டது சமுத்திரம்'

'சமுத்திர மெண்மடங்கு கொண்டது வெள்ளம்'

என்னும் சூத்திரங்களுக்கும் இவ்வாறே பொருள்காண்புழிக் கோடி சங்கம் விந்தம் எனவும், கோடிவிந்தம் குமுதம் எனவும், கோடி குமுதம் பதுமமெனவும், கோடிபதுமம் நாடு எனவும், கோடிநாடு சமுத்திரம் எனவும், கோடிசமுத்திரம் வெள்ளமெனவும் வெளியாகின்றன.

'நெய்தலுங் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டங் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு வழிமுறை
ஊழி யொருவினை யுணர்த்தலின் முதுமைக்கு
ஊழி யாவரு முணரா
ஆழி முதல்வநிற் பேணுதுந் தொழுது'

எனப் பரிபாடலுட் கீரந்தையார்கூறியவற்றுள்ளே, ஆம்பல் குமுதமெனவும், கமலம் பதுமமெனவும் அறிகின்றும். நெய்தல் நிலவுரிமைபற்றிச் சமுத்திரமாதல் சாலும்; குவளையினை நாடு எனல் பொருந்தும்.

'×' பெருக்கற்குறி, இதனைப் 'பெருக்கு' என வாசிப்பாம்.

கோடி×கோடி=சங்கம். இது 15 தானத்தது.

கோடி×கோடி×கோடி=விந்தம். இது 22 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி=குமுதம் (ஆம்பல்). இது 29 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி=பதுமம் (கமலம்). இது 36 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி=நாடு (குவளை). இது 43 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி= சமுத்திரம் (நெய்தல்). இது 50 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி× கோடி=வெள்ளம். இது 57 தானத்தது.

சங்கினது உருவம் இருகோடி (கோணம்). விந்தத்தின் (மலையின்) உருவம் முக்கோடி(கோணம்). ஆம்பலின் உருவம் நாற்கோடி (நாலிதழ்). தாமரையினுருவம் ஐங்கோடி (ஐயிதழ்)–பதுமபந்தம் ஐயிதழாக வரையப்படும். நாட்டினுருவமும், குவளையினுருவமும் அறுகோடி (அறுகோணம், ஆறிதழ்). சமுத்திரத்தினுருவம் எழுகோடி (ஏழுகடல்), நெய்தல்மலருக்கு இதழ் ஏழாதல்வேண்டும். வெள்ளத்தினுருவம் எண்கோடி எட்டுத்திக்கிலும் பரவுவது. இவை யாவும் காரணப்பெயராதல் காண்க. சங்கநிதி கோடிகோடி பொன். பதுமநிதி கோடிகோடிகோடிகோடிகோடிபொன். இவை எண்ணினல் எய்திய பெயர்கள்.

இப்பேரெண்களை வழங்கும் வான நூன்முடிபுகள்சிலவற்றைத் தருவாம். அண்டத்திலுள்ள எப்பொருளினும் ஒளியே மிகுந்த வேகமுடையது. அது ஒருசெக்கண்டில் (Second, இருநொடிப்பொழுது) ஓரிலட்சத்து எண்பத்தாறுயிரம் (1,86,000) மைல் செல்லும். ஒருமணிநேரத்திலே அறுபத்தாறுகோடியே தொண்ணூற்றுறு இலட்சம் (66,96,00,000) மைல் செல்லும். ஒரு நாளிலே ஓராயிரத்தறுநூற்றேழுகோடியே நாலுலட்சம் (1,607, 04,00,000 மைல் செல்லும். ஓராண்டிலே ஐந்திலட்சத்து எண்பத் தாறுயிரத்து ஐஞ்ஞூற்றறுபத்தொன்பதுகோடியே அறுபதிலட்சம்

(5,86,569,60,00,000) மைல் செல்லும். ஆதிரை (Sirins) எனப்படும் விண்மீனிலிருந்து பூமிக்கு ஒளிவர எட்டுவருடமும் எட்டு மாதமும் செல்லுமென்பர். ஆதலின் அவ்விண்மீனின் தூரம் ஏறத்தாழ ஐம்பத்தோரிலட்சகோடிமைலாகும். அந்திரமீதா (Andromeda) என்னும் விண்மீனிலிருந்து பூமிக்கு ஒளிவர எட்டிலட்சத்து ஐம்பத்தையாயிரம் ஆண்டு செல்லுமெனக் கணக்கிட்டிருக்கின்றனர். ஆதலின் அவ்விண்மீனின்தூரம் ஐம்பதினுயிரம் சங்கமைலுக்குமேலாமென அறிகின்றும். அண்டகோளத்திலுள்ள விண்மீன்களின்தொகை இருபதினுயிரகோடியெனக் கணிதநூலார் கணக்கிட்டிருக்கின்றனர். இவையனைத்தினையும் அடக்கிய அண்டகோளமும் அளவினுட்பட்டதெனக் கணிதநூற்பேரறிஞராகிய எயின்ஸ்தேயின் (Einstein) என்னும் ஆசிரியர் கூறுவர். இவர் கருத்தின்படி அண்டகோளத்தினெல்லையிலிருந்து புறப்பட்ட ஒளி பூவுலகத்தை அடைய மூவாயிரத்திருநூறுகோடி ஆண்டுகள் செல்லும். அங்ஙனமாதலின் அண்டகோளத்தின் அச்சுநீளம் முந்நூற்றெழுபத்தைந்து விந்தமே நாற்பதுலட்சத்து நாற்பத்தையாயிரத்து நானூற்றுநாற்பதுசங்கம் (375,40,45,440,00,00,000, 00,00, 000) மைல் ஆகும்.

அண்டத்தின் அளவைக் காண்பதற்குப் பேரெண்கள் கருவியாதல்போல அணுவினளவைக் காண்பதற்குக் கீழ்வாயெண்கள் கருவியாவன.

ஏகத்தின் பத்திலொருகூறு .1 என எழுதப்படும், இதனைப் 'புள்ளி ஒன்று' என வாசிப்பாம். ஏகத்தின் நூற்றிலொறுகூறு .01 என எழுதப்படும். இதனைப் 'புள்ளி வெற்றிலக்கம் ஒன்று' என்பாம். ஏகத்தின் ஆயிரத்திலொருகூறு .001 என எழுதப்படும். இதனைப் 'புள்ளி வெற்றிலக்கம் 'வெற்றிலக்கம் ஒன்று' என வாசிப்பாம் பிறவும் இப்படியே.

$$.1 = \frac{1}{10} = 10^{-1}$$
$$.01 = \frac{1}{100} = 10^{-2}.$$

$$.001 = \frac{1}{1000} = 10^{-3}$$

$$.0001 = \frac{1}{10000} = 10^{-4}$$

மேலேகுறித்த படியெண்களை, 'குறையொன்று,' 'குறையிரண்டு,' 'குறைமூன்று,' 'குறைநான்கு' என்பாம். ஏகத்தின்படியெண் வெற்றிலக்கம் ஆகும். இது இங்ஙனம் ஆதலைக் கீழே காண்க. எண்ணினை வைத்துப் பத்தினாற் பிரித்துச்செல்ல ஒவ்வொரு பிரித்தலுக்கும் படியெண் ஒவ்வொன்று குறையும். ஆயிரத்திற்றொடங்கி ஆயிரத்திலொருகூறு (கீழ்வாய் ஆயிரம்) வரையும் செல்வாம்.

| | |
|---|---|
| $1000 = 10^3$ | பத்துமுப்படி |
| $100 = 10^2$ | பத்து இருபடி |
| $10 = 10^1$ | பத்து ஒருபடி |
| $1 = 10^0$ | பத்து வெற்றுப்படி |
| $.1 = 10^{-1}$ | பத்துக்குறையொருபடி |
| $.01 = 10^{-2}$ | பத்துக்குறையிருபடி |
| $.001 = 10^{-3}$ | பத்துக்குறைமுப்படி |

அங்ஙனமாதலின்,

$$1000 \times .001 = 10^3 \times 10^{-3}$$
$$= 10^0$$
$$= 1$$

கணிதகிருத்தியத்திலே கூட்டற்குறி +, கழித்தற்குறி —, இவற்றைக் 'கூட்டு', 'கழி' எனவும், 'நிறை', 'குறை' யெனவும் வாசிக்கலாம். பிரித்தற்குறி ÷, இதனைப் பிரியென வாசிக்கலாம். பின்னவெண்களில் கீழ் உறுப்புப் 'பகுதி'யெனவும் மேலுறுப்புத் 'தொகுதி'யெனவும்படுவ. $\frac{3}{4}$ என்பதில் 4 பகுதி, 3 தொகுதி. ஏகத்தை 4 கூறுசெய்து 3 கூறு எடுத்ததென்பதை இப்பின்னவெண் குறிக்கும். பின்னவெண்ணின் பகுதியையும் தொகுதியையும் ஒரே எண்ணினாற் பெருக்கினாலோ பிரித்தாலோ பின்னவெண்ணின்மதிப்பு வேறுபடாது.

$$\frac{3}{4}=\frac{15}{20}=\frac{75}{100}=\cdot75$$

$$\frac{1}{8}=\frac{5}{40}=\frac{25}{200}=\frac{125}{1000}=\cdot125$$

மேலே பின்னவெண்களோடு ஒத்த மதிப்புடைய கீழ்வாயெண்களைப் பெற்றும்.

$$.125 = .1 + .02 + .005$$
$$=\frac{1}{10}+\frac{2}{100}+\frac{5}{1000}.$$

பத்திலொருகூறும், நூற்றிலிருகூறும், ஆயிரத்தில் ஐந்து கூறும் சேர்ந்து எட்டிலொருகூற்றுக்குச் சமமென்பது பெறப்பட்டது.

$10^1=10$, $10^2=100$ ஆதலின், இவற்றினிடையே உளவாய இருதானத்தெண்களின் படியெண் 1 உடன் ஒரு கீழ்வாயெண் சேர்ந்தததாதல்வேண்டும். $10^2 = 100$, $10^3 = 1000$ ஆதலின், இவற்றினிடையே உளவாய மூன்றுதானத்தெண்களின் படியெண் 2 உடன் ஒரு கீழ்வாயெண் சேர்ந்தததாதல்வேண்டுமென இவ்வாறு கொண்டு கணிதமுறையினாலே எவ்வெண்ணுக்கும் படியெண்ணைக் கணித்துக் கண்டிருக்கிறார்கள்.

நூறுநூறாயிரம் = கோடி

$$100\times100\times1000 = 1,00,00,000$$

$$10^2\times10^2\times10^3 = 10^7$$

சினைகளின் படியெண்களாகிய 2, 2, 3 என்பவற்றைக் கூட்டப் பெருக்கவெண்ணின் படியெண்ணாகிய 7 வருகிறது.

$$1,00,00,000\div1,000 = 10,000$$

$$10^7\div10^3 = 10^4$$

பிரிக்கப்படுமெண்ணின்படியெண்ணாகிய 7 இலிருந்து பிரிக்குமெண்ணின்படியெண்ணாகிய 3 ஐக் கழிக்க ஈவின்படியெண்ணாகிய 4 வருகிறது.

அங்ஙனமாதலின் படியெண்ணின் உபயோகத்தினலே பெருக்கற்கிருத்தியம் கூட்டற்கிருத்தியமாகவும் பிரித்தற்கிருத்தியம் கழித்தற்கிருத்தியமாகவும் எய்திநின்றன. கணிதகிருத்தியங்களை இலகுப்படுத்துதல் காரணமாகப் படியெண்ணினை 'இலகுவெண்' (Logarithm) என்பர். இவற்றின்விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்ந்துகொள்க. 'Log 100' என ஆங்கிலத்தில் வருவதனை 'லகு 100' எனத் தமிழில் எழுதுவாம்.

லகு 100 = 2

லகு 1000 = 3

லகு ·1 = —1

லகு ·01 = —2

லகு ·001 = —3

லகு 10 = 1

லகு 1 = 0

என்பன வெளிப்படை.

லகு 2 = ·3010

லகு 3 = ·4771

லகு 7 = ·8452

என்பன கணிதநூலார் கண்ட முடிபுகள்.

$2 \times 2 = 4$

$2 \times 3 = 6$

$10 \div 2 = 5$

$2 \times 4 = 8$

$3 \times 3 = 9$

ஆதலின்

லகு 4 = லகு 2 + லகு 2

= ·3010 + .3010

= ·6020

லகு 5 = லகு 10 − லகு 2
= 1 − .3010
= ·6990

லகு 6 = லகு 2 + லகு 3
= ·3010 + .4771
= ·7781

லகு 8 = லகு 4 + லகு 2
= ·6020 + .3010
= ·9030

லகு 9 = லகு 3 + லகு 3
= ·4771 + ·4771
= ·9542

லகு 12 = லகு 4 + லகு 3
= ·6020 + ·4771
= 1·0791

லகு 15 = லகு 5 + லகு 3
= ·6990 + ·4771
= 1·1761

லகு $\frac{3}{2}$ = லகு 3 − லகு 2
= ·4771 − ·3010
= ·1761

லகு $\frac{4}{3}$ = லகு 4 − லகு 3
= ·6020 − ·4771
= ·1249

இம்முடிபுகள் இசையாராய்ச்சிக்குப் பயன்படுதலை ‘இசைக் கிரம’த்துப் பிற்பகுதியிலே காட்டுவோம்.

---

உ

# ஓர் எதிருரை*

செந்தமிழ்த்தொகுதி 38, பகுதி 7-ல், பத்திராசிரியர்பெயரால் தொடர்ந்துவெளிவரும் பராதாழ்வான்வைபவவிமரிசனத்தின் ஒருபகுதியை என் நண்பர் ஒருவர் எனக்குக் காட்டி, அதுபற்றி என்கருத்தை வெளியிடவேண்டினர். ஆதலினுல் இதனை எழுத நேர்ந்தது.

"வந்தெதிரே தொழுதானை" எனும் கம்பரின் இராமாயண அயோத்தியாகாண்டப்பாட்டில், "அவனுமவன் அடிவீழ்ந்தான்" எனும் தொடருக்குச் சங்க உயர்தரத் தமிழ்க்கலாசாலைத் தலைமைப் பேராசிரியரும், செந்தமிழ்ப் பத்திராசிரியருமான திரு. நாராயணையங்காரவர்கள்பெயரால் வந்த உரை பெரிதும் வியப்பைத் தந்தது. நின்றுங்கே சொற்றொடர்க்குச் செம்பொருள்கொள்ளாமல், விந்தைகள்புகுத்தித் தந்திறல்காட்டவிரும்பும் பிறபுலவர் இவ்வாறு எழுதினுல் அதை அறவே புறக்கணித்துவிடலாம். இருமொழிப்புலமையும் அளவைநூற்கல்வியும் நிரம்பிய செந்தமிழாசிரியரவர்கள்பெயரொடுவருவதெதுவும் கற்ருேர்கருத்தைப் பற்றுமாதலின், இவ்வுரையைச்சிறிது ஆழ்ந்தாராய்வது இச்செய்யுட் செவ்வியை ஐயமறத் தெளியவிரும்புவோரைச் சிந்திக்கத்தூண்டும் துணையாகும்.

இப்பாட்டின் சொற்பொருளையும் அது சுட்டும் கம்பர் கருத்தையும் ஆயுமுன், முதலில் எச்சரித்துக்கூற நான் விரும்பும் செய்தி ஒன்றுளது. சமயமாபு முதலிய சார்பெதுவும் தூண்டவிடாமல், விருப்பு வெறுப்புக்களுக்கு இடங்கொடாமல், ஒரு தமிழ்மாணவன் பெரும்புலவனெருவன்தருஞ் செய்யுட்சொற்கொண்டே அவன்கருதும் அரும்பொருளாயும் நிலைநின்று மெய்காணும் நோக்கொன்றே துணைக்கொண்டு இதனிற் புகுகின்றேன். தமிழ்நூன்மரபும் சொற்பொருளும் ஆன்ருேர் செய்யுளிற்பயிலுமியல்வழக்குமட்டுமே என் ஆராய்ச்சிக்கருவிகளாகும்.

---

* இதற்கு மறுமொழி இதனையடுத்துச் சேர்க்கப்பெற்றுளது.

வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினன் தகவுடையோர்
சிந்தையிலுஞ் சென்னியிலும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

என்பது கம்பர்பாட்டு. இதில், "அவனும் அவனடிவீழ்ந்தான்" என்னும் தொடர்தான் இவ்வாராய்ச்சிக்குப்பொருள். யாரடியில் யார் விழுந்தார்? என்பது வினு. செந்தமிழாசிரியரவர்கள், குகன்காலிற் பரதன் விழுந்தான்; விழுந்தவேந்தனை (வாளா) வேடன் வாரியெடுத்துத் தழுவினுன்: என்கிறுர்கள். இது ஒருசில வைணவருவக்கும் கருத்தாயிருக்கலாம். கடவுட்கொள்கையே மடமெனப்பழித்து வரிசையும் தரமும் வாழ்க்கைவேற்றுமைகளும் அறவே ஒழித்து மகிழும் மற்றொருசாரார், பழம்பாட்டுக்களில் தம் புதுக்கோள் புகுத்தும் கருத்தோடு இவ்வுரை கூறுவதும் உண்டு.

தமிழ்கூறுநல்லுலக மரபும், பாடும்புலவன் நூற்போக்கும் முரணுது சொற்றொடரின் செம்பொருளால் ஆக்கியோன் நோக்கை ஆய்ந்துகொள்வதே அறிவறமும் பொருள்நிறைவும் அளிப்பதாகும்.

சக்கரவர்த்திதிருமகனுய், இராமனிழந்த இறைமைக்குரியனுய், தந்தையிறந்து தமையன் கொடுவன நெடுவாழ்வேற்று வெறுத்துவிட்டகன்ற நாட்டையாளும் வேந்தனுய் விளங்கும் பரதன், தன்னுட்டு வேடன்காலிற் கும்பிட்டுவிழவும், அவ்வேடன் (வாளா) வேந்தன் வணக்கம் தனக்கு உரியதாக ஏற்று மகிழ்ந்து இறுகத் தழுவியமைவது உலகியலும் உயர்மரபும் அறவொழுக்கும் அலமருத்தும் இழுக்காதலின், பெருங்காவியத்தில் அவ்வாறு கூறல் புலமையறமிறந்த பிழையாமென்று சார்பும் கோளும் ஊராப் புலவர் பலர் புகலுகின்றுர். தொழுது எதிரேவந்த குகனைப் பரதன் வணங்க, உடனே வழக்கும் தகுதியும் வழுவாது குகன் மன்னவனடிபணிய, வேடனுயினும், அவன் தன் காதற்றமையனுக்கு அன்பனெனக் கேட்டுணர்ந்த பரதன், அவனையெடுத்து அன்போடணைத்து மகிழ்ந்த மரபிறவாவரலாற்றை, அப்படியே சொல்லோவியமாக இச்செய்யுள் தீட்டுகிறது என்பது இப்புலவர்கருத்து.

இவ் விருகருத்துக்களில் இயற்பொருத்தமாவதைத் தேர்வதே ஈண்டு எனது முயற்சியாகும்.

இப்பாட்டில், வருதல் தொழுதல் வணங்கல் அடிவீழ்தல் தழுவுதல் என ஐந்துவினை வருகின்றன. நிரலே அவற்றை நிகழ்த்தியவரைத் தேர்ந்து தெளிந்தால் பாட்டின்பொருள்தெரிதல் எளிதாய்விடும்.

இவற்றுள் வருதற்றெழில் குகனது; அவன் 'தனியே தான் வந்தான்' என அடுத்த மேற்செய்யுள் கூறுவதால் இதில் ஐயமில்லை. பத்திராசிரியரவர்களும் அப்படியே கொள்ளுகிறார்கள்.

மற்றையவற்றுள், "'எதிரே தொழுதானை' என்றது பரதாழ்வானை என்பதாம்" என்கிறார்கள். அடுத்தபடி, 'குகன் வணங்கினான் என்பதாம்' என்கிறார்கள். பிறகு, "பிரமாதிதேவர்களாலும் வணங்கப்பெறும் பெருமையுடைய பரதாழ்வான்,............குகப்பெருமாள் திருவடிகளிலே.........தண்டாகாரமாய்விழுந்து சேவித்தான்"...........(தன்னடிவீழ்ந்த பரதனைக்) குகன் பித்ருபாவம் கொண்டு தன் இருகையாலும் தழுவி எடுத்தான்" என முடிக்கின்றார்கள். இம்முடிபுக்குத் தாம் தழுவும் ஒருசில வைணவர் கொள்கையும் கூற்றும் எடுத்து ஏதுக்காட்டுகிறார்கள். இவ்வினை முடிபுகள் ஒவ்வொன்றும் ஆன்ற அறம், அடிப்பட்ட நன்மரபு, பழவழக்கு, உயரொழுக்கம், புலத்துறை, நூன்முறை, செய்யுணிலை, சொல்லமைதிகளோடு முரணுமாறு வலிந்துபெறவைப்பனவாகத் தோன்றுகின்றன.

தம்கூற்றுக்குப் பத்திராசிரியரவர்கள் காட்டும் சிறந்தகாரணம் பின்வருவது:—"எத்துணை உயர்வுடையோர்க்கும் பகவத்ப்ராப்திபடைந்த பாகவதர் பூஜ்யராவர்." 'பாகவதோத்தமனான குகப்பெருமாள்திருவடிகளிலே பரதாழ்வான் விழுந்து சேவித்தான்' என்னும் சங்கமபத்திக்கொள்கை பழமரபிழித்து அறமழிக்கும் புதுமைக்கும் போதிய ஆதாரவாகக் கருதுகிறார்கள். இது, இவர்கள் கூறும் பாகவதபத்திமுறையிலும் குகப்பெருமாளைக் குற்றப்படுத்தும்பழியாகும். பிரமனும் வணங்கும் பரமபாகவத பூஜ்யனான

பரதனைப் பாதம்பணிந்து பரவுவதன்றே பாகவதனான குகன் கடமை. அதைவிட்டு, முதலிலும் பரதன்தொழும்வரை தான் வாளாவிருந்து, பின் பரதன் தன்னடிவிழுந்தபிறகும் தான் விழுந்து கும்பிடாது அவனைத் தழுவியமைதல் குகனைப் பாகவதனாக்காமல், 'உறுப்பொத்து மக்கட்பண்பில்லாத நடைமரம்போல்வார்வரிசையில் வைப்பதாகும். இதை விலக்க ஆசிரியாவர்கள் படைத்து மொழியும் கருத்துக்களின் இயையாமையை அதுபற்றிய செய்யுட் டொடராராயுமிடத்து விரித்து விளக்குவன். இங்கு முதலிற் சில பொதுநியாயங்களை ஆராய்வேன்.

இராமனைக் குகன் கண்டாங்கெழுந்த காதலால் பணிந்து பரவினசெய்தியன்றி, இராமன் கடவுட்டன்மைகண்டு பத்திபண்ணின பாகவதனாகக் கம்பரும் வான்மீகரும் தம் பெருங்காவியங்களில் யாண்டுங் கூறிற்றிலர். பரதனும் இராமனைத் தந்தையின் மிக்க தகவுடைத் தமயனென்றன்றிப் பகவனென்றறிந்து பரசினதாகக் காவியமிரண்டுங் காட்டவுமில்லை. இராமனுக்குப்பிறகு இராமவழிபாடு எழுந்ததாகும். அது முதிர்ந்து கிளைபலவாய்க் கொளைபெருகிக் காழ்த்தபின்பே பத்திநெறி பாகவதமுறைகள் பரவல்கூடும். குகனைப் பெருமாளாக்கிப் பரதனை ஆழ்வானாக்கும் மனப்பான்மை அதன்பின் பிறந்த ஒரு பயனாகும். அத்துணிபு காழ்த்த பிற்காலப் பாகவதநோக்கை, இராமன் மனிதனாகவாழ்ந்த காலமக்கள்மே லேற்றுதல் அறிவறமாகாது. இராமனை அவன் காலமக்கள், அவன் சால்பும் பெருமையும் கொண்டு வியந்து களித்துக் காதலித்தாரென்பதல்லால், அவனைக் கடவுளெனக்கண்டு வழிபட்டாரென ஆதிகாவியத்தில் எதளவும் சொல்லவுமில்லை. கம்பரும் தம் காலநிலையிற் சிலவிடத்து இராமனைக் கடவுளென அவன்வரலாற்றினிடையிடையே குறிப்பதல்லால் இராமன்கால மக்கள் அதையுணர்ந்தொழுகிவந்த கதை சொன்னாரில்லை. அவன் காலமக்கள் அவன் கடவுளென அறிந்திருப்பின் அவ்வவதாரநோக்கமே அழிந்துவிடும். மனித இராமன்மாட்சி மக்கள்மனத்தொடு அன்பெல்லாம் தனதுகொண்ட நற்செய்தியன்றே' அவனவதாரப் பெருமையும் பயனும் சிறக்கச்செய்யும்? கடவுளென்றுணரிற்

கடையரும் வணங்கி, இடையருப்பூசை யியற்றுவரன்றே! பரதனும் குகனும் இராமனைப் பகவனென்றறியாராகவே, அவர் அக்காலம் பாகவதராகார்; இராமனைப் பகவனாகக்கொண்ட பிற்காலப் பாகவதர் தம்நோக்கால் அப்பெரியானைப் பணிந்து அன்புபண்ணிய புண்ணியரைப் பரமபாகவதராகக் கருதுவது இயல்பு. எனில், தம் கொள்கையை இராமன்காலத்தவருக்கேற்றுதல், வரலாற்றின் வாய்ப்புக்கு அமைவதன்று. இருவரும் இராமனைக் கடவுளென்றறியாக்காலத்து, வேந்தன் வேடனைப் பாகவதனாகப் பணிந்து அடிவிழுந்து தெண்டனிடுவதும், காடன் அதனைத் தனக்குரியதாக ஏற்றுக் களித்து இறைவனைத் தழுவும் இறுமாப்பும் தகுதியும் வழக்கும் தலைதடுமாறும் மிகுதியாக முடிவனவாகும். இது நிற்க.

இனி, 'ஒருவன் பாகவதனாகில், அவனை மன்னரும் வணங்குதல் நன்மரபாகும்' என்னும் வாதமும், சிறந்த இச்செய்யுட்குச் செந்தமிழாசிரியர்தந்த புத்துரைக்கு உதவாமை இங்குச் சிந்திக்கத்தக்கது. 'மலரிருந்த அந்தண(பிரம)னும் தனைவணங்குமவன்' பரதன்: என்பதைப் பத்திராசிரியரும் உடன்படுகின்றனர். இத்தொடரை விளக்குமிடத்து, "பகவதம்ஸபூதனுயும் திருவாழியாழ்வானவதாரமாயும் உள்ளவனாகையாலே பிரமாதிதேவர்களாலும் வணங்கப்பெறும் பெருமையுடைய பரதாழ்வான்' என்று அவர்களே கூறுகின்றார்கள். ஆகவே, பாகவதநிலையிலும், கரவாக்காதலால் இராமனைநட்ட குகனில், கனவிலும் நனவிலும் உரனுணர்வொத்துத் தன்னுயிர் இராமனாகக் கொண்டு, தன் உடலும் உள்ளமும் இன்னுயிருமெல்லாம் இராமனுடைமையென்றுவந்த பரதன் குறைந்தவனல்லன்; பலபடியுயர்ந்த பண்புடைமேலோன். ஆகவே, பார்த்திவன்நிலையிலும் பாகவத இயல்பிலும் பூசனைக்குரிய பரதனைப் பணிந்து அடிவிழுந்து பரசுதற்குரியவன் குகனே. அதற்கு மாறாக, பாகவதவேந்தனைப் பண்பிலி வேடன் முன்வணங்கா முருடன்மட்டுமல்லன்; 'மன்னவன் தன்னடி வணங்கியபிறகும் தான் தாழாத தருக்குருவானவன்' என்று அவனைப் பழிகரப்பங்கதப்பான்மைய புகழ்நிந்தைக்கு ஆளாக்குதல்,

குகப்பெருமானின் பாகவதப்பெருமைக்கு மாருக அவன் வேட்டு வக்கயமையை வெளியிடுவதாகும். இப்பழிமுரண் உணர்ந்து பத்திராசிரியரவர்கள் அதை விலக்கல்விரும்பிக் காவியங்கூருக் கற்பிதவாயில் புதுவது புனைந்து புகல்கின்ருர்கள். "பரதாழ்வானுடைய இராமபத்தியறியாதநிலையில், குகன், அவன் இராமனுக்குத் தம்பி என்பதுபற்றித் தன்னிடம் ஜேஷ்டப்ராத்ருபுத்திபண்ணிச் சேவித்தான் என்று எண்ணி, ஜ்யேஷ்டப்ராதா பித்ருசமானனுகையாலே பித்ருபாவங்கொண்டு......தன் இரண்டுகையாலும் தழுவியெடுத்தான்'' என எடுத்து விளக்குகிருர்கள். இது முன்னெடு பின் மாறுகொள்ளுங்கூற்ருய்த் தோற்றுகிறது.

குகனை உடன்பிறந்தானுகக்கூறுதல், இராமனுக்கும் அவன் தம்பியர்க்கும் அகலும் அவர் அன்பின் தகவறமும் ஒப்புரவோம்பும் வள்ளன்மையுமாய்ச்சிறப்புஞ்செவ்வியுங் குறிப்பதாகும். ஆனல், தன்னை இராமனுக்குத்தம்பியும் பரதனுக்குத்தமையனுமாகக் குகன் கருதில், அஃது அவன்பாற் கயமையைக்காட்டுஞ் செருக்காய்முடியும். உண்மையில், குகனியல் அத்துணைக்கீழ்மையதன்று என்பது, பலகாலும் தன்தாழ்வு மறவாது, அவர் பெருமைசுட்டி அவன்பேசுஞ்சொற்களே நற்சான்றுகூறி நாட்டக்காண்பாம். தன்னைத் தயரதன்றநயர்க்குத்தமனெனற்குமாருக, "தோழமையென்றவர் சொல்லியசொல் ஒருசொல்லன்ருே? ஏழமைவேடன் இறந்திலனென்று எனை ஏசாரோ?'' என்று எண்ணித் தாழ்வொடு தன்னுள்ளே பேசுகிருன். முன் தன் எளிமைகருதாமல் இராகவன் தன்னைத் தோழன் என்று அழைத்த சொல்லொன்றே பெறலரும் பெரும்பேருகப் பேணி மகிழ்ந்து பெருமிதமுறுகின்ருன். தனக்கு இராமன் தமையனென்று எண்ணித் தருக்குதற்குமாருக, 'அஞ்சனவண்ணன் என் ஆருயிர்நாயகன்', 'நம்பியும் என் நாயகனை ஒக்கின்ருன்', 'எம்பெருமான்' என்று எப்போதும் தன் தாழ்வும் இராமனுயர்வும் கருதிப் பேணிப் பேசுகிருன். இவற்ருல் இவன் உள்ளக்கிடை நன்ருய் வெளியாகும். ஆதலால், தன்னை இராமன் தம்பியும் பரதன் தமையனுமாகப் பாவனையுலகிலும் எண்ணுமியல்பு, இவனிருக்குமிடத்தும் இராதென்பது தேற்றம்.

இனி, இரண்டாவதாக, பரதனுடைய இராமபத்தியறியாத நிலையில், குகன் அவன் தெண்டனிட்டதை ஏற்றதாக எண்ணுதற் கும் கவி இடம்தரவில்லை. நேர்ந்ததும் நிகழ்ந்ததும் தேர்ந்து தெளிக்கும் வாலாற்றில், குகன் பரதனையணுகுமுன் அவன் பத்திப் பெருக்கும் உத்தமவொழுக்கும் ஓர்ந்து வியப்பொடு விம்மித முற்றனனென்று கம்பர் தெளிக்கின்ருர். அவர் தரும் நிகழ்ச்சி நிரல்வருமாறு:—படையொடு கங்கையின் வடகரைவந்த பரதனை, மருங்கடை தென்கரை தோன்றின குகன் கண்டு, முதலிற் கடுத்து, 'வஞ்சனையால் அரசெய்தியமன்னரும் வந்தாரே' எனக் கருதிச் சினத்தொடு தென்கரை எதிர்நின்ருன். நின்றவனை நன்கறிந்த பரதனின் "மூரித்தேர்வல்லான், குகன்நிலையைத் தன்றிறத்தார் அயிர்த்து இகலைவளர்க்காமல் தடுக்கும்நோக்கால், பரதனைப் பணிந்து, அவன் உளமுவக்க, முன் அவனறியாவுண்மைகளை எடுத் துரைத்தான். "உங்கள்குலத் தனிநாதற்கு (இராமனுக்கு) உயிர்த் துணைவன்;.........குகன் என்னும் குறி (-பெயர்) உடையான், நிற்காணும் உள்ளத்தான் நெறியெதிர்நின்றனன்" என்று குகன் குறிப்பறிந்து, நட்பாக்கி நலம்விளக்க இறைவன்முன் இங்கிதத் தோடு இவ்வாறு இயம்பலானுன். கேட்ட பரதன், அங்நின்ருன் தன் முன்னேன்—தங்கள்குல "மன்-முன்னே தழீஇக்கொண்ட மனக் கினிய துணைவனேல், என்முன்னே அவற்காண்பென் யானே சென்று என எழுந்தான்." "என்றெழுந்து தம்பியொடும் எழு கின்ற காதலொடும்.........குளிர்கங்கைக்கரை குறுகிநின்ருன்." நெருங்கிய பரதனைக் குகன் நேரில் நோக்கினுன்; பெரியோன் பிரிவின்பரிவால் உளக்கொடுவாடிய பரதன்திருமேனிநிலை யுணர்ந்த எயினர்கோன் தன் தவறும் அவன் தகவும் கண்கூடாகக் கண்டவுடன் 'துண்ணென்று துடிக்குமுளத்து எதிர்நின்ற அண்ண லின் அன்பின் துன்பத்துயருருவைப் பொறிக்கலானுன்:—

"வற்கலையின் உடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றன்".

குகன் உடனே தன் உணர்விழந்து,

"விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றெழுந்தான்"...

அவ்வாறு தன் ஐயன்பால் கரைகாணுக்காதலால் நைந்துருகும் 'துரிசிலா' மனப் பரதன் அன்பொடும் துன்புருவ வுயிர்ச்சிலையைக் கண்ணிற் கண்டான். அன்பறத்தின் எல்லையாவான், முன்னவன் பிரிவாற்றமுடியானாகித் "துன்பமொருமுடிவில்"லான் துயர்சுடரும் தூயநிலை கண்புகுத, அப்பொய்யிலாவுள்ள வேடன் ஐயமும் உணர்வும் அற்றுத் தனைமறந்தயர்ந்து தன் முன்தவறினுக்கு இரங்கித் தன்னுட் பரதனைப் பரசலுற்றான்.

"நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான், ...........தவவேடம் தலைநின்றான்; துன்பம் ஒருமுடிவில்லை" (இராமன்சென்ற) "திசை நோக்கித் தொழுகின்றான், எம்பெருமான்பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு" "உண்டிடுக்க ணொன்றுடையான்; (இராமன்பால்) உலையாத அன்புடையான்; (இராமன்) கொண்ட தவவேடமே கொண்டிருந்தான்;" எனப் பரதன்பெருமையினைப் பாராட்டிப் பரசுபவன், பெருநாடுபெயர்ந்துவரும் திருவுளத்தின்குறிப்பறிவென்: என நினைத்து, 'ஓர்நாவாயில் ஒருதனியே தான்வந்தான்.' இது கம்பர்தரும் நிகழ்ச்சிநிரல்.

இதில் வேடனும் வேந்தனும் கூடுமுன்னமே குகன், பரதன் இராமன்பால் உலையாத அன்புடையான்; அவன்பிரிவால், 'கற்கனியக் கனிகின்றதுய'ரொடு தலைநின்ற தவவேடந்தாங்கி,(இராமன் சென்ற) 'திசைநோக்கித் தொழுகின்ற' துரிசிலுளக்குரிசிலென்று தேர்ந்து தெளிந்து, அப்பெரியோன் குறிப்பறியச்சூழ்ந்து துணிந்து அவனருகே வடகரைக்குவந்தானென்று ஐயமறக் கம்பர் இவண் விளக்கிவைத்தார். இதன்பிறகு இவ்விடத்தில், "பரதனுடைய இராமபத்தியறியாதநிலையிற் குகன், அவன் தன்னடிபணியும் தம்பியெனக்கருதிக் களித்தான் எனுங் கூற்று எற்றதென எணைத்தளவும் கொள்ளற்கில்லை.

ஆகவே, இதுவரை கூறியவாற்றால், செந்தமிழில் இதுபற்றி வந்த புத்துரையை உயரறத்தகுதியும் உலகியல்வழக்கும் ஒருங்கு விலக்கும்பரிசுணர்ந்தோம். இன்னும், கவிக்கூற்றால், பரதன் பெருமையை அறிந்துவந்தணுகிய குகன் அவன்முன் தொழுது

எதிர்தலும், தனை அவன் வணங்கத் தான் அவன் தாள்களில் தாழ்தலும், நிரலே புரிந்து நெறியும் மரபும் பிறழாதொழுகிய பெற்றியைப் புகழ்வதே இப்பாட்டின் கருத்தென்பதும் ஓராங்குப் பொதுநிலையில் உணர்ந்துகொண்டோம்.

இனி, கம்பரின் அருந்தொடர்ச்செய்யுளில் ஆய்தற்கு எடுத்த இவ்விருந்தெனும் பாட்டை அதன் சொற்றொடர்கொண்டு ஆழ்ந்து துருவி அலசிப்பார்ப்போம்.

"வந்தெதிரே தொழுதானை வணங்கினான்" என்னும் முதற்றொடரில், வருதலும் தொழுதலும் வணங்கலுமாகிய வினைகள் மூன்றுள. அவற்றுள் வருதல் குகன்தொழில் என்பது, 'தனியே தான்வந்தான்' என்னும் முன்பாட்டின்முடிபால் தெளிவாகும். பத்திராசிரியாவர்களுக்கும் அதுவே உடன்பாடாதலின், அதுபற்றி ஏதும் வாதம் எழுதற்கில்லை. மற்றிருவினைகளும் ஒருவன்தொழில் சுட்டாமல் இருவேறுமுதல்வர்க்குரியவென்பதும் வெளிப்படை; வணங்கினான் என்னும் முற்றுக்குத் தொழுதானையென்பது செயப்படுபொருளாதலின், தொழுதவன் ஒருவன்; அவனை வணங்கினவன் வேறொருவன்: என்பது தேற்றம். முன் ஒருபாட்டில், இராமன் சென்றதிசைநோக்கித்தொழுகின்றான் பரதனெனக் குகன்கண்ட செய்தி கூறப்படுவதனால் இங்கும் தொழுந்தொழில் பரதனையே பற்றுவதாகப் பத்திராசிரியாவர்கள் துணிகின்றார்கள். முன்பாட்டில் பரதன் திசைநோக்கித்தொழுதது இராமனையன்றித் தன்னைக் கருதியன்று எனக் குகனே விளக்கிக்கூறுகிறான். அத்தொழுதல் இடையறவற்ற இராமவழிபாடாதலின், அதன் தொடர்புசுட்டலே இங்குக் கம்பர்கருத்தாமேல், 'வந்துதிசை தொழுவானை' எனப் பொருந்துசொற்பெய்து தெளித்திருப்பார். அன்றியும், அத் தொழுதல் இராமன்பாலாதலின், குகனை எதிர்தொழும் புதிய தொழிலை அது சுட்டாது. இன்னும் வந்து என்னும் எச்சம், இயலடைவில் அடுத்துவரும் எதிரே தொழும் வினையைத் தொடர்வதுவே இயல்பாகும். அடுத்ததை விடுத்து, அதன்மிசைக்குதித்துப் பிறகுவரும் மற்றொரு வணங்கல்வினையைத் தழுவுமென்பதிற் சிறப்பும் செவ்வியும் பிறக்குமாறில்லை. சேயசொற்புணர்ப்பது

செம்பொருட்சிறப்புக்கு இன்றியமையா இடங்களிலன்றித் தூய மரபாகாது. செந்தொடையாகவந்த சொற்றொடர்களை அடுத்தன தொடுத்து நிரல்பட எண்ணி நேர்பொருள்கொள்வதே நல்ல புலவழக்கும் தொல்லைநூன்மரபும் ஆகும்.

இதுவுமன்றி, வருதலும் வணங்கலும் ஒருதலையாகக் குகனை தாக்கி, எதிர்தொழுதவன் பரதனெனக்கொள்வதில் இடைமலையும் தடைகள் பல இன்னும் உள. குகனைப் பரதனே முதலிற் கும்பிடுங் குறிப்புக் கவிகருத்தாயின், 'வந்து தனைத்தொழுதானை வணங்கினான்' என்று எளிதிற் றெளியக் கூறியிருக்கலாம். படருறும் பரதனின் தொடர்பறுத்தொழுதலே குறிப்பாயின், 'வந்துதிசை தொழுவானை' எனத் தெளித்திருக்கலாம். மேலும், இராமனை இடையறாது தொழுவது குகனை எதிர்தொழுதலாகாதே! 'வந்து எதிரே தொழுதானை' என்று விதந்துகூறியதால், ஒருவனை வருபவன் எதிர்முக மணுகி இறைஞ்சியசெய்தியே குறிப்பாதல் ஒருதலை. இதில் தொழுதவன் பரதனெனில், அத்தொழுதலின்பின் வணங்கியதன்றி, முன் குகன்வணங்காமை வெளிப்படை. எனவே, வணங்காதணுகி, வளையாமரமாய் எதிர்ந்த குகனை, நின்றபரதன் முதலிற் றொழுவதை, "எதிரேதொழுத"லென்று குறிக்க எழுந்த நியாயம் எதுவும் இல்லை. 'எதிரேதொழுதல்' என்றது, தனைத்தொழுதவனைத் தான் எதிர்தொழுத தகைசால்முறையே சாற்றியதாகும். தன்னை முன் பரதன் தொழும்வரை வணங்காக் குகனை மன்னவனே முன்னர்த் தொழுதது கவிக்குறிப்பாயின், அதை விளக்கி, 'வந்துதனைத் தொழுதானை வணங்கினான்' என்றேனும், 'வந்த குகன் தொழுதானை வணங்கினான்' என்றேனும் தெளிவும் பொருத்தமும் தெரித்துரைத்திருக்கலாம். பரதன் வடகரையில் நின்றவன்; அவனைத் தென்கரையிலிருந்து வந்தெதிர்ந்தவன் குகன்; இதில் ஐயமில்லை. எதிர்ந்தவன் தொழுவது 'எதிர்தொழுத' லாகும். அன்றி, வணங்கிவந்தவனை நின்றவன் வணங்கலும் எதிர் தொழுதலாகும். வணக்கத்திற்கு மறுவணக்கம் எதிர்தொழுதல் என்பதில் இழுக்குமில்லை. வந்தும் வணங்கானை முந்துறவணங்கி நின்றவன் பணிதல், தொழுதலாமல்லாமல், எதிர்தொழுதலில்லை. புதுக்கோள்புகுத்தும் இவ்வுரையில் எழும்பிழை பெரும்பழிசுமத்

தும்பெற்றியும் இங்கு மறக்கொணுதாகும். பரதன் தூய்மையும் பத்தியும் கண்டு புகழ்ந்து பரிந்து பாராட்டிவந்த குகன், பரதன் தன்னைத்தொழும்வரை வணங்காது வாளாநின்று, தன்னை மன்னன் முன் தொழுதபின் சிறிது வணங்குதற்கு இணங்கினன்: என்பது குகனது சிறுமையேகுறிப்பதாய்முடியும்.

> "பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
> அணியுமாம் தன்னை வியந்து" (திருவள்ளுவர்.)

மேல்விளக்கியாங்குப்பரதனின் உத்தமபத்திமை கண்கூடாகக் கண்டு உவந்து காணவந்த குகன், வாளாவந்து வணங்காதுநிற்பது இயற்கையில்லை. அதனால், நெருங்குமுன்னரே பரதன் பெருமை தான் நேரிற்கண்டுணர்ந்துற்ற குகன், தன் 'நாயகன்' காதற்றம்பியும், 'பிரமனும் வணங்கும் பாகவதோத்தமனும் ஆன' பரதனைத் தான் தொழுது எதிர்தலே தகவுறுநிகழ்ச்சியாம். எழுந்துதொழுவாளைத் 'தொழுதெழுவாள்' என்றதுபோலத் தொழுது எதிரேவந்தானை 'வந்தெதிரேதொழுதா'னென்று செய்யுள்நோக்கியுரைத்தார். குகன் பரதனெதிர் தொழுதுவருதலே இயல்பும் மரபும் எழிலுறஇயையும் செயலாமென்பது தேற்றமாகும். ஆகவே, 'வந்து எதிரே தொழுதவன்' குகனேயாவன். தொழுதெதிர்குகனைப் பழுதிலாப்பரதன் வணங்கலும் மரபொடு பொருந்தும் அறவொழுக்காகும். பெருந்தகைப்பரதன் தனக்கு எதிர்வணக்கம் தருவதைத் தாங்காணுகித் தாழாது அவன்தாளில் தான் தாழ்ந்துவிழுந்து குகன் தெண்டனிடுவதும், அதனைப் பொருத அன்புசால் பரதன், விழுந்துகும்பிட்டவன் வேடனுயினும், தன் 'மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினியதுணைவ'னுதலின், ஆர்வத்தால் அவனை எடுத்தணைத்து இறுகத்தழுவி உறவாடுவதும் இருவரியல்பையும் பெருமைப்படுத்தும் இனிய நிகழ்ச்சிகள். ஆதலின் அவற்றை அவ்வெழின்முறையே ஓதினர் கம்பர். அது நிற்க.

இன்னும், இப்பாட்டின் புத்துரையில், இதன்வினைகளின் முதல்களை விசதமாய்த் தெளிய விளக்கம்போதா. வந்தென்கிளவி 'ஒருதனியே தான்வந்தான்' என்னும் முன்பாட்டீற்றுமுற்றொடு தொடர்ந்து இனிதுவிளங்கும் எச்சமாவதால், அதன் முதலறிவதில்

ஐயமில்லை. ‘தொழுதான்’, ‘வணங்கினான்’ என்னும் இருவினைக்கும் எழுவாய்த்தொடர்பு மயங்காமரபின் நயம்பெறவில்லை. தொழுத வன் பரதன், வணங்கினவன் குகன்: என்று இதிற் கொள்ளின், பாட்டு அது சரியெனக்காட்டுமாறில்லை. நிரலே இவ் விருதொழிற்கு முரியவரைச்சுட்டுஞ் சொற்குறிப்பில்லாமையினால் இவ்வினை தமக்கு எழுவாயின்றித் தலைதடுமாறும்நிலையில் நிற்கும். “அந்தணனும் தனைவணங்குமவன்” பரதனாதலின், குகன்வினைகுறிக்கும் வணங்கு தலுக்கு அத்தொடர் எழுவாயாகாது. ‘வணங்கினான்’ யாரென்ன இக்கவியில் விதந்தகுறிப்பே யில்லை. மயக்கறுத்துக் கவிகருத்தைத் தெளிப்பதற்கு மாறாக, எவ்வினைக்கு யாதெழுவாய்? என்பதுவே துணிவில்லாத் தடுமாற்றம் தருவதாகும். ‘வந்தெதிர்தொழுத’லை ஒருமுதலின் தொடர்வினையாக்கின், தொழுது எதிர்ந்தவனே வந்தவனாகி, வந்தகுகனே தொழுதெதிர்ந்தவன் என்று இனிதமை கின்றது. மற்றை ‘வணங்கினான்’ என்னும் வினையும், ‘அந்தணனும் தனைவணங்குமவன்’ என்று அடுத்துவரும் தொடரெழுவாய் தழுவி முடியும். ‘தனைவணங்குமவனும்’ என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. ‘பிரமனும் தனைவணங்கும்பெரியான் வேடனைவணங்கும் அணிநிறை பணிவுடையான்’ எனும் குறிப்புடையது இவ்வும்மை. ‘வணங்கினான் அவனும்’ என வினையும் முதலும் தொடர்ந்துநின்று இனியமுடிவுகொண்டன. ‘அவனடிவீழ்ந்தான்’ என்னும் அடுத்த தொடரில், அவன் என்னும் எழுவாய், அடிவீழ்ந்தான் என்னும் முற்றுவினைபெற்று, சற்றும் முரணற்று இன்முறையில் இற்றது. இதில் “அவன்” என்னும் எழுவாய், முன்னறிசுட்டாய், வந்துதொழுத குகனைக்குறித்தது. எனவே இதில் வினையெல்லாம் தத்தம் முதல்களை இடைப்பிறதொடாது அடுத்தடுத்தணைந்து முடிந்த செவ்வி வியத்தற்குரியது. வந்து எதிர்தொழுதவன் குகன்; வணங்கினவன் ‘தனைவணங்குமவன்’; அவன் (குகன்) பரதனடி வீழ்ந்தான்; விழுந்தவனைத் ‘தழுவினான் தகவுடையோர் சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான்’: என எழுவாய் பயனிலைகளெல்லால் சேய்மைப் புணர்ப்பும் மாட்டேறும் வேண்டாமல், செந்தொடராய்வந்தமையும் செய்யுணயம் சிந்தித்து வியக்கற் பாற்று. பாட்டுமுழுதும் பலவினைகள் மாட்டேறுகொள்ளாமற்

செந்தொடையாய்த் தம்முதல்கள் வந்து தமைத் தழுவிநின்று, சிறந்தசொல்லும் நிறைந்தபொருளும் பொருந்த அமைந்து திருந்திய புலன்விருந்தாவது போற்றற்குரியது.

இனி, இதையடுத்த பின்பாட்டில், முன்னதனீற்றின்மொழிந்த தழுவுதொழிலின் தொடர்புசுட்டித் 'தழுவினபுளிஞர்வேந்தன்' எனத் தொடங்கும் தொடர்கொண்டு, முன்தழுவினவன் புளிஞர் வேந்தன், அடிபணிந்து தழுவப்பட்டவன் அயோத்தியர்வேந்தன்: எனக் காட்டுவர் புத்துரைகாரர். 'தழுவின' என்பது தன்வினைப் பொருளே தரும் எனும் நியதி தமிழில் இல்லை. உண்டசோறு, உடுத்தஆடை, கட்டியவீடு, ஈட்டியபொருள்: என்பவற்றுள், சோறும் ஆடையும் வீடும் பொருளும் எழுவாயாகா; செயப்படு பொருள்களே. வினைச்சொல் நான்கும் சோறுமுதலியவற்றின் தன் வினைப்பொருள் சுட்டாமை தேற்றம். அணிந்தமாலை, பணிந்த பாதம்: என வருவனவும் அம்மரபினவே. இவ்வாறு செய்வினையுரு விற் செயப்பாட்டுவினைகள்வருதல் பெருவழக்கென்பது அறியார் இலரே. அதனால், 'தழுவின புளிஞர்வேந்தன்' என்பது பரதனால் தழுவப்பட்ட புளிஞர்வேந்தன் என்றமைவது தமிழ்வழக்கு. அன்றியும், முன்பாட்டால், பரதன் தன்னடிபணிந்த குகனைத் தழுவினான்: எனத் தெளிவானநிலையில், இதில், 'தழுவின' என்பது பரதன்றொழிற்றொடர்பாதலின், (பரதன்) தழுவின புளிஞர் வேந்தன் என்று அமையநின்றதே பொருத்தமாகும். மேலே, 'தனி.,.....வந்தான்' என முன்பாட்டிற்கூறி அடுத்தபாட்டில், 'வந்து' என வந்தவினை, 'தனி........வந்தான்' தொழிற்றொடர் பானதுபோலவே, இங்கும், மேற்கவியில், 'தந்தையினுங் களிகூரத் தழுவின' பரதனின் அருஞ்செயற்றொடர்பே இதிற் குறிக்கப்பெறுத லின், 'தழுவின' எனுமுருவே 'தழுவப்பட்ட' என்பதனினும் பொருத்தம் மிக்குடையதாகும். ஆகவே, அடிவிழுந்த குகனைத் தழுவியவன் பரதன்: எனப் பிறவாற்றால் ஒருதலையாகத் தெளிந்த பின், இதில், 'தழுவின புளிஞர்வேந்தன்' என்பது பரதன் தழுவின குகனைச் சுட்டுதலில் எனைத்தளவும் ஐயமெழ நியாயமில்லை.

இனி, இவ்வாறு மரபழிக்கும் விதண்டைகள் தம் தமிழ்ச் செய்யுளுட்புகுமென முன்னறிந்துபோலும் கம்பர், அவற்றின் வழி

யுடைத்து, அடுத்தபாட்டில் தம் கருத்தைத்தெளித்து வலியுறுத்துஞ் சொற்றொடரைப் பெய்துவைத்தார். குகன் கும்பிட்டெழுந்த பின், நாடாளாமல் பரதன் அங்கு எய்தியதென்? என விநயத்துடன் அவனை வினவினன். 'தூரிசிலா உள்ளத்தா'னும், 'முழுதுலகளித்ததந்தை முந்தையோர்முறையினின்றும் வழுவினன்; அதனைநீக்க மன்னனை (காடுசென்ற இராமனை மீட்டு அரசாள)க் கொணர்வான்' வந்தேன்: என்று விடைபகர்ந்துநின்றான். 'பள்ளத்தின் வெள்ளமன்ன' பரதனை, 'சேணுயர் தருமத்தின்தேவை, செம்மையின் ஆணியை' முன் தவறெண்ணிய தன்பிழைக்கு அழியும் குகன், அத்தூயவன் வாயால் இராமனையமே தூண்டவந்த நோக்கத்தை நேரிற் கேட்டான். கேட்டதும், 'கிராதர்வேந்தன் கிளர்ந்தெழும் உயிரனுகி, மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்...... தீட்டரு மேனிமைந்தன் (பரதன்) சேவடிக்கமலப்பூவிற் பூட்டியகையன், பொய்யிலுள்ளத்தன் புலனுற்றான்' எனக் குகன்செயலைக் கம்பர் விசதமாக விளக்கியுள்ளார். 'மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தவன் குகன் என்பதில் இருகருத்துக்கு இடமில்லை; அனைவருக்கும் ஒன்றே உடன்பாடு. செந்தமிழாசிரியரவர்களும், இதில் மீட்டும் மண்ணதனில்வீழ்ந்தவன் குகனே என்று எழுதுகிறார்கள். 'மீட்டும் மண்ணதனில் வீழ்ந்த'வன் குகன் எனவே, முதலில் மண்ணதனில் விழுந்தவனும் அவனே என்பது தேற்றம். ஐயமில்லாது இருமுறையும் மண்ணில்விழுந்து தெண்டனிட்டவன் குகன்: என்று இவ்வாறு கம்பர் தெள்ளத்தெளியச் சொல்லிய பின்னும், முன் அடிவீழ்ந்தவன் பரதனே: என்பாரைத் தேற்றுவது அரிது. எனினும் செந்தமிழாசிரியர்போன்ற உண்மைவாதிகளுக்கு உள்ளவாறு தோன்றுங் கருத்தை ஒளியாதுரைப்பது கடன்: உண்மைதேர்வதே அவர்களுக்கும் ஒத்தநோக்கமென யான் நம்புவதாலும், செய்யுள் சொற்பொருள் மரபொடுமுரணுத் தமிழ்நூன்முறையில், பிறகோட்சாயமுறுமுணர்வின்றி, 'ஒருதலையா உட்கோட்டமின்மை' விரும்பும் புலனழுக்கற்ற புலவரைக்கருதியும் வைதிக வைணவநண்பர் ஒருவர் வேண்டுதலானும், இவ்வெதிருரை வெளியிட விடைபெறலானேன்.

புத்துரைபகர்வோர், எத்திறத்தானும் தங்கோள் நாட்ட விரும்பி இப்பாட்டில் மறுக்கொணுச்சொற்பொருள் மறைக்க முயலுவர். மீட்டும் என்ற தெளிசொற்பொருளை மறுத்தற்கொல்லாமையால், பரதனடியில் குகன் இப்பின்பாட்டுரைத்தபடி

மண்ணில்விழுந்து தெண்டனிட்டதுதவிர முன் ஒருமுறையும் அவனடிவிழுந்து தெண்டனிட்டெழுந்ததை மறுத்தற்கில்லை. அதனால், குகன், பரதனடிவிழுந்து இருமுறை தொழுததை உடன்பட்டு, அவன் முதன்முறை செய்த தெண்டன் கம்பர்கவியிற் கூறு ஊகம் எனவும், முன்பாட்டில், 'அவனடிவீழ்ந்தான்' என விதந்துகூறியது, குகன் முதற்றொழுததன்று, பரதனே விழுந்து வணங்கியதாகும் எனவும் மழுப்பி நழுவுகின்றனர். இங்கு, பரதன் தன்னடியில்விழுந்தது தன் தம்பியெனும் முறைபற்றி எனக் கருதித் தான் தமையன் முறையினிலே அவனை வாளாதழுவின பின், அவன்தகுதி முன்னுணராக் குகன், பிறகறிந்து, தன் தவறுக்குக் கழுவாயாக முதலிற் பரதனடிபணிந்து பாகவதாபராத க்ஷாபணம்பண்ணிக்கொண்டது முதல்தெண்டன்; அதைக் கம்பர் கூறிற்றிலர்; மறுபடியும் பரதன் பாகவதப்பெருமைபாராட்டி, அவன்பாதத்தில் குகன் மீட்டும் விழுந்தான்; அதைமட்டும், 'மீட்டும் மண்ணதனில்வீழ்ந்தான்' எனக் கம்பர் இங்குக் கூறிப் போந்தார்: என்று ஒரு புதியகதை புனைந்துரையிற் புகுத்துகின்றனர். பாகவதாபராதக்குற்றமும் அதன் பரிகாரமான தெண்ட முறைப்பயனும் இங்கு வரலாற்றுநிரலிடையே வருதற்கில்லை. அவ்வாறு உண்மையிலே நிகழ்ந்ததாயின், குகபரதர் தலைக்கூட்டத் தொடக்கமுதல் இறுதிவரை நேர்ந்தசெயல் நிகழ்ந்தபடியே முழுதும் வழுவாமுறையில் விரித்து இனிதுவிளக்கும் பாகவதப்பெரும் புலவரான கம்பர் குகப்பெருமாள் தன் அபராதக்ஷாபணம்பண்ணிய புண்ணிய முதல்மண்வீழ்ச்சியைப் புகழ்ந்துபேசாமல் அதை மட்டும் மறைத்துமூடக் கருதுவானேன்? அது கம்பருமறியாப் பாகவதநிகழ்ச்சி எனக் கூறமாட்டார்களென்று எண்ணுகிறேன். அறிந்து அதை மறைப்பது கவிகருத்தாயின், அறவே குறியா தொழிப்பதைவிட்டு, 'மீட்டும் மண்ணதனில்வீழ்ந்தான்' என்று மறைவெளியிட்ட விந்தை என்னே! வெளியிடவிரும்பா இளிவாற் செயலன்று இக்குகன்பணிவு; குகனதுபெருமையை மிகப்பாராட் டும்பான்மைத்தாகும். அதனை மறைக்க எண்ணிய கம்பர், தன்னை மறந்து வெட்டவெளிச்சமாய் மறைவெளியிட்டனரென்பது வியப்பை விளைப்பதாகும். இடர்ப்பட்டு இவ்வாறு வலிந்து உரை கூறிக் கம்பர்கவிகளைச் செம்பொருள்சிதைத்துச் செவ்விகுறைப் பதினும், மரபொடுமுரணுச் சொற்பொருள்கொண்டு நானில

வழக்கும் நல்லறநெறியும் உலேயாதோம்புதல் புலமையறமாகும். அதனால் ஒருசிலர்மதக்கோள் உறழினும், பலமதத்தவரும் உடன்படும் சொற்சீர்ச் செம்பொருள் காவியப்பாக்களில் யாவருங் கொள்வதே கடமையாகும். இம்முறையிற் சீர்தூக்கில் நேர்பொருளேத் தெளிதல் மிக எளிதாகும். பரதனேக் குகனடியிற் பணிவித்தல் பரதனுக்குக் குறையன்று, 'பணியுமாம் என்றும் பெருமை': ஆதலின். ஆனால், அது குகனுக்கு அழியாப்பழிசுமத்தும் பாவமாகும். பரதனடி குகன்பணிதல், இயலறமும் உயர்மரபுமாவதோடு, குகனுக்கும் அவன்பெருமை குறையாமல் வீறுதரும் முறைமையாகும். இவ்விரண்டுகருத்திடையே கவிநோக்கும் சொற்போக்கும் சீர்தூக்கிப் பொருத்தமெனப் புலனளவிற் கண்டபடி கொள்வார்களாக.

வாதப்போர்கருதி இதை வரைந்தேனல்லேன். உறழ்ச்சிமகிழுளக்கிடையும் ஊனுளமும் உடையேனல்லேன். பத்திராசிரியரவர்களுடைய தமிழகமதிக்கும் தமிழ்ப்புலமை, இவ்வொரு மறுப்பால் மாசுபடுஞ் சிறுமைத்தன்று. இப்புதுக்கருத்தை வெளியிடுவார் பிறர்சிலரைக் கேட்டுமுளேன். பலதிங்கள்முன் ஒருநாள் கல்லூரிமாணவர்கள் குகப்படலம் பாடமென அதுபற்றிப் பேசக்கேட்டனர். அன்று ஆங்கே உரையினிடை இக்கவியின் புத்துரையும் என் மறுப்பும் சுருங்கச்சொன்னேன். பிறபுலவர் இவ்வுரை எழுதினரேல் மறுப்பெழுதும் விருப்பினை யான் சிறிதும் கொள்ளேன். புகழ்மிகு நற்புலமையொடு செந்தமிழாசிரியருமாய்த் திகழ்பவர் இவ்வுரைதழுவியெழுதியமையால், பலர் எளிதில் இதை ஆராயாது உடன்படுதல்கூடுமாதலின் அதை விலக்கிச் சிந்தித்துச் சீர்தூக்கத் தூண்டுவதே இவ்வுரையின் நோக்கம். அதனால் இகலுறழ்வின்றித் தந்த ஈருரைகளேயும் தூக்கி ஆய்பவர் அறிவாற் கண்ட செம்பொருள்கொள்வரென்று நம்பி நான் முடிக்கலானேன்.

**S. S. Bharathi,**

பசுமலே.

---

ஸ்ரீ:

# 'ஓர் எதிருரை' மறுமொழி

திரு. நாராயணையங்கார், பத்திராசிரியர்.

இதன்முன் சேர்க்கப்பெற்றிருக்கும் எதிருரையானது, வழக்கியல்வல்லுநரான சீராளர் S S. பாரதியார், M.A., B.L. அவர்களாலெழுதப்பட்டது. அதைப் படிக்கும் ஒரு சிலருக்குப் பத்திராசிரியர் பரதாழ்வான்வைபவம் என்னும் பெயரிட்டு எழுதிவரும் விரிவுரையின் ஒரு சிறுபகுதியைச் சீராளர் பாரதியாரவர்கள் மறுத்தழித்துரைத்திருப்பதுபோலத் தோன்றவுங்கூடும். அத்தோற்றம் பொய்த்தோற்றம் என்று அவர் அறிந்துகொள்ளவேண்டி இவ்வெதிருரைமறுமொழி வரையப்பெறுகிறது.

அவ்வெதிருரையாளர்க்குப் பத்திராசிரியருரையை மறுத்துரைக்குங்கருத்திருக்குமாயின் ஓர் எதிருரையென்று பெயர் கொடாமலே ஒரு மறுப்புரையென்று பெயர்கொடுத்திருப்பார்கள். அவ்வாறு அவர்கள் பெயர்கொடாமையால் அவர்கள் பத்திராசிரியருரையை மறுத்துரைக்குங்கருத்தினரல்லரென்று அறியலாம்.

அன்றியும், எதிருரையென்பதற்கு எதிர்வீடு எதிர்த்தெரு என்புழிப்போல ஒருரையோடொத்த பிறிதோருரையென்று பொருளாகும். இதனாலும் அது பத்திராசிரியருரையை மறுத்து அழித்துரைத்ததாகாது.

மேலும், ஒருதலையாயுள்ளதோருரைக்கு மறுதலையாயுள்ளதோருரை எனக்கொள்ளினும் அவ்விருதலையும் நிலைபெற்றதாகும். எதிர்ப்பு ஒருதலைபற்றிநில்லாது ஒன்றோடொன்று மாறுபடும் இருதலையும்பற்றிநிற்பதே.

இன்னும், எதிருரையென்பதற்கு வாதியும் எதிரியுமாகநிற்கும் இருதிறத்தார்வழக்கினுள் எதிரிபக்கத்துவழக்கை எடுத்துரைக்கும் உரை என்னவுமாம்.

இப்பொருள்கொண்டுநோக்குங்கால், பத்திராசிரியருரைப் பொருள்மேல் 'ஒரு வைதிக வைணவநண்ப'ரென்பவர் மாறுபட்டு

எதிரியாகநின்று எதிர்வழக்குத்தொடரவிரும்பித் தமிழ்ப்புலமையுடையவழக்கியல்வல்லுநரான சீராளர். S. S. பாரதியாரவர்களிடம் தம் எதிர்வழக்கை எடுத்துரைக்கவேண்டிக்கொண்டதற்கிசைந்து அவ்வெதிருரை வரையப்பெற்றதென்பது போதரும்.

இவ்வெதிர்ப்பு நீதிமன்றத்து எதிர்ப்புப்போல ஒருபொருள் பற்றியதாயிருக்கவேண்டும்; இங்குள்ள வழக்கு பத்திராசிரியர் பக்கத்தில் அறிவனூற்பொருளும், எதிர்வழக்குடையார்பக்கத்தில் உலகியற்பொருளுமான வேறுவேறுபொருள்பற்றியதாயிருத்தலால் ஒருபொருள்பற்றியவழக்காகமாட்டாது; அதனாலும் பத்திராசிரியருரை மறுக்கப்பட்டதாகாது.

அன்றியும், இது வாதியும் எதிரியும் ஒருபொருள்பற்றி மாறுபட்டவழக்கென்று வைத்துக்கொள்வோமாஞலும், வழக்கியல்வல்லார் (வக்கீல்கள்) இருபக்கத்துவழக்கினுள் எந்தப்பக்கத்தில்நின்று பேசினாலும் தமக்கு எதிர்ப்பக்கத்துவழக்கை மறுத்துத் தம் பக்கமே நியாயமும் உண்மையும் உள்ளதென்று சாதிக்கவல்ல ஆற்றலும் அறிவும் சொல்வன்மையும் கடமையும் இயல்பும் உடையராயிருப்பர் என்பது ஒருதலை.

ஆதலால் ஒரு வைதிகவைணவநண்பரென்பவருடைய வேண்டுகோட்கிணங்கி, அவர்பக்கமிருந்து அவர்கருத்துக்கொண்டு பேசும் எதிருரையால்மட்டும் உண்மை நிறுவப்படமாட்டாது. இருதலை வழக்கும் கேட்டுணர்ந்த நடுவுநிலையுடையோர் அளிக்கும் ஜெய பத்திரமான உரைமுடிவுகொண்டே உண்மையுணரவேண்டும். இது எதிருரையாளர்க்கும் உடன்பாடே. கம்பர்கருத்தும் அதுவே.

பத்திராசிரியர் எழுதிவரும் பராதாழ்வான்வைபவம் என்னும் விரிவுரையை எதிர்வழக்குடையார் அடிதொடுத்துப் படித்துவந்திருப்பாராயின் அதில் எதிர்வழக்குத்தொடர்தற்கு இடமில்லையென்று உணர்ந்திருப்பர்; அவர் அவ்வாறு உணராமையாலும், பத்திராசிரியர் கருதியெழுதிவரும் அறிவனூற்பொருள் அவரறியாமையாலும், தமக்குத்தோன்றும் உலகியற்பொருளொடு மாறுபட்டதென்றெண்ணி எதிர்வழக்குத்தொடரக்கருதித் தம்நண்பரும் வழக்கியல்வல்லுநருமான பாரதியாரவர்களைத் தம்பக்கம் நின்று எதிர்வழக்காடுமாறு வேண்டிக்கொண்டதற்கிசைந்து அவ்வெதிருரை வழங்கப்பட்டமையால் . அவ்வெதிருரையில் எதிர்

வழக்குடையார்கருதும்பொருளையும் அவர்சொல்லிய வழக்குரைகளையும் தழுவியுள்ள குற்றங் குறைகளொன்றும் எதிர்வழக்குரைப் போரைச்சாராது எதிர்வழக்குடையோரையே சாருமென்று அறியத்தகும்.

இனி அவ்வெதிருரையுட்புகுந்து ஒருசிறிது ஆராய்வாம்.

'வந்தெதிரேதொழுதானை' என்னும் பாட்டில் "அவனுமவனடி வீழ்ந்தான்" என்பதற்குப் பத்திராசிரியர் எழுதியவுரை வியப்பைத் தந்தது என்கிறார்கள். இதனுள் வியப்பைத்தந்தது என்பது குறிப்புமொழியாய் இகழ்ச்சியுணர நிற்பதாகச் சிலர் கருதக் கூடும்; அக்கருத்து அவ்வெதிருரையாளர்க்குச் சிறிதும் இல்லை என்பதை, "இருமொழிப்புலமையும் அளவைநூற்கல்வியும் நிரம்பிய செந்தமிழாசிரியர்பெயரொடுவருவதெதுவும் கற்றோர்கருத்தைப்பற்றும்" என்று செந்தமிழாசிரியரையும் அவரெழுதும் விரிவுரைகளையும் அவ்வெதிருரையாளரே புகழ்ந்துகூறினமையால் அது வெளிப்படைச்சொல்லாய்ப் புகழ்தற்குரிய வியப்பையே தெரிப்பதாயிற்று.

முதலில், ஒரு தமிழ்மாணவன், பெரும்புலவனொருவன் தரும் செய்யுட்சொற்கொண்டே சமயம் மரபு முதலிய சார்புபற்றாது அரும்பொருளாயும்நிலையில் நின்று அவ்வெதிருரை வரையப்பெறுவதாக எச்சரித்திருக்கிறார்கள்.

இதனால் அவர்கள் கல்லூரிமாணவர்குழுவில், "கொள்வோன் கொள்வகையறிந்து அவனுளங்கொளக் கோட்டமில்மனத்தின் நூல்கொடுக்கும்" நல்லாசிரியரிலக்கணத்தைமேற்கொண்டு தம் புலமைத்திறமையின் நிலைமையை ஒரு மாணவர்நிலையில் தாழ்த்திக்கொண்டு அவரறியுமளவில் உலகியற்பொருளொன்றேகொண்டு அதனையவர்க்கு வலியுறுத்தவேண்டி அறிவனூற்பொருளை, "மருந்தென யாக்கைக்குவேண்டா" என்பது போலும் விலக்கணிநடையால் மறுத்துரைத்த விரிவுரையின்முறையே அவ்வெதிருரை வரையப்பெற்றதாகத் தெரிகிறது.

அவ்வெதிருரை ஒரு தமிழ்மாணவன்நிலையில் நின்று எழுதப் பெறாமல், கற்றுவல்ல தமது புலமைத்திறமைகொண்டு பெரும்புலவர் குழுவிடைப்பேசும் விரிவுரைதழுவியெழுதப்படுமாயின், பெரும்

புலவரான கம்பநாட்டர்கருத்தொடுபட்ட சமயமரபுமுதலிய தழுவி யே அறிவனூற்பொருள்கொண்டு எழுதப்பட்டிருக்குமென்பது குறிப்பாயிற்று.

பெரும்புலவனுவான்.—

"சத்தம் மெய்ஞ்ஞானம் தருக்கம் சமயமே
வித்தகர்கண்ட வீடுள்ளிட்டாங்-கத்தகத்
தந்தவிவ் வைந்து மறிவான் தலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து"

என்னும் தமிழ்வழக்கான நீதிநூலால், சமயநூல்முதலியன கற்று, வீடுபேறளிக்கும் அறிவனூற்பொருளையும் தழுவிப் பெருங்காப் பியங்கள் இயற்றவல்லவனுயிருப்பான் என்று அறிகிறோம். அத் தகைய பெரும்புலவர் கம்பநாடரென்பதில் தடையில்லை. அவர் கவிப்பொருளை விரித்துரைக்குமிடத்தில் சமயம், மரபு முதலிய சார்புபற்றியே அறிவனூற்பொருள்கொண்டுரைத்தலும் எதிருரை யாளர்க்கு உடன்பாடென்பது குறிப்பாயிற்று.

அறிவனுவான்-வாலறிவனுகிய கடவுள். அவன் நூல்-அவனரு ளிய வேதாகமங்கள். அவற்றின்பொருள்-ஆண்டானடிமைத்திறம், கடவுள்வழிபாடு, அடியார்வழிபாடு, தத்துவதரிசனம், துறவு, வீடுபேறு முதலியன. இவையெல்லாம் கற்றுவல்ல பேரறிவுடைய ரல்லோரால் அறிதற்கரியனவென்பதும், நூல்கற்போ ரறிதற் குரியன உலகியற்பொருளே என்பதும் திருக்கோவையாருரைப் பாயிரத்தால் அறியலாம்.

அறிவனூற்பொருளொன்றேயுடையன தேவாரம், திருவாச கம், திருவாய்மொழி முதலியன. உலகியற்பொருளொன்றே யுடையன நளன்கதை பெருங்கதை முதலியன. அவ்விருவகைப் பொருளும் ஒருங்குடையன சிந்தாமணி சிலப்பதிகாரம் மணி மேகலை இராமாயணம் முதலியன.

பலவேறு சமயமரபும் குலமரபுகளுமுடைய கல்லூரிமாணவர் குழுவிடையே அத்தகைய இராமாயணத்திலுள்ள அறிவனூற் பொருளான சமயமரபுமுதலிய சார்புபற்றுது உலகியல்பற்றியே கூறுவது நல்லமுறையேயாம்; அங்ஙனமன்றி ஒருசமயத்தார்கோட் பாடுபற்றியும், ஒருகுலத்தார்க்குரிய ஒழுக்கம்பற்றியும் விரிவுரை வழங்குவது தக்கதன்று; ஆயினும், சொல்லக்கருதி எடுத்துக்

கொண்டபொருட்டொடர்புபற்றிய அறிவனூற்பொருளிற் கவி கருத்திருக்குமாயின், கற்றோருமறியாவண்ணம் அதை மறுத்துப் பேசலாகாதென்பது பத்திராசிரியர் துணிபு.

இத்துணிபையுடன்பட்டே எதிருரையாளரவர்களும், பாடும் புலவனது நூற்போக்கால் ஆக்கியோன்கருத்தறியவேண்டுமென் கிறார்கள். பாடும்புலவன் நூற்போக்கு இன்னதெனக் காட்டினார்க ளில்லை. அது இங்குப் பாடும்புலவரான கம்பர்வாக்காலே வெளிப் படையாய்ச் சொல்லப்பட்டிருப்பதுபற்றி விட்டுவிட்டார்கள் போலும். அது அறந்தலைநிறுவுதலே. அவ்வறம், பசுதர்மமும் பதிதர்மமும் ஆம். பசுதர்மம் இம்மைமறுமைக்குரிய அறம் பொரு ளின்ப மடைதல். இது பசுபோகத்துக்குரியது. பதிதர்மம் வீடு பேற்றுக்குரிய கடவுள்வழிபாடு முதலியனவாம். இவை பதி போகத்துக்கு உரியன.

இவ்விருவகையறங்களையும் நிலைநிறுத்தற்பொருட்டு இராமா யணபுருஷர்கள் அவதரித்தார்கள் என்னுங் கருத்தால், தம் நூலுக்கு இராமாயணம் எனப் பெயரிடாமல் இராமாவதாரம் என்று பெய ரிட்டார். இதனால், இராமாவதாரவைபவம்கூறும்நூல் என்று நூற்போக்குக் கூறப்பட்டதாயிற்று. அவதாரவைபவம் அறந்தலை நிறுவல் (தர்மஸம்ஸ்தாபநம்) என்பது உலகறிந்ததே. மேலும் நூற்போக்கை அறிவிக்கவேண்டியே, திருவவதாரப்படலம் என்றும், திருவடிதொழுதபடலம் என்றும் சமயமரபுகொண்டு பெயரிட்டனர்.

அவ்வளவினமையாது நூற்போக்கை இன்னும் விளங்கக் கூறவேண்டி, அவ்வவதாரபுருஷர்கள் அறந்தலைநிறுவத்தொடங்கிய அயோத்தியாகாண்டத்தொடக்கத்தில்,

வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனு முயிரு முணர்வும்போல் உள்ளும் புறத்து முளனென்ப
கூனுஞ் சிறிய கோத்தாயும் கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோ ரிடுக்கண் காத்த கழல்வேந்தே.

என்கிறார்.

இதனுள், முன்னிரண்டடியாலும் அறிவனூற்பொருளான தத்துவப்பொருளியல்பும் இறைவனியல்பும் கூறி, அவன் உள்ளும் புறத்துமுளன் என்ற குறிப்பால், அவன் மனம் மொழி மெய் என்னும் திரிகரணங்களாலும் வழிபடற்குரியோன் என்று கடவுள்வழிபா

டாகிய பதிதர்மம் கூறினர். பின்பு பின்னிரண்டடியாலும் அவனே இராமனாக அவதரித்து உலகியலொழுக்கம் என்னும் பசுதர்மத்தை நிலைபெறச்செய்தான் என்னுங் கருத்தால், 'கூனும் சிறிய கோத்தாயும் கொடுமையிழைப்பக் கோற்றுறந்து கானுங்கடலுங் கடந்து இமையோரிடுக்கண் காத்த கழல்வேந்தே' என நூற்போக்கை உலகியற்பொருண்மேலும் வைத்துக்கூறினர். இதனால் இராமகதை முழுதும் அறந்தலைநிறுவுதற்பயத்ததாமென்று அறியக்கிடக்கிறது.

அவர்க்கு அது கருத்தாயின் அத்தகையபொருள் உள்ளவிடங்களிலெல்லாம் தம் கருத்தை ஏன் வெளிப்படையாகச்சொல்லவில்லை? என்று எதிர்வழக்குடையார் வினவுவர். அறிவனூற்பொருள் உலகியலொழுக்கோடு ஓரோவழி மாறுபட்டிருக்குமாதலால் அதனை வெளிப்படக்கூறின் சிற்றறிவுடைய அநதிகாரிகளும் அவ்வொழுக்கை மேற்கொள்வர்; அதனால் உலகியலொழுக்கம் அழியும்: என்றெண்ணி, அதற்கு அதிகாரிகளாய்த் தத்வதர்சிகளாய் உலகப்பற்றற்றவர்களான பேரறிவாளரே அறிந்தொழுகுமாறு மறைத்துரைப்பதே மாபாயிற்று. அன்றியும், புல்லறிவாளர்கள் அதனை யிகழ்ந்து தீக்கதியெய்தாமைப்பொருட்டும் மறைத்துரைக்கப்படும் எனினுமாம்.

இக்கருத்துக்கொண்டே மந்திரம், ரகசியம், வேதம் இவற்றை மறை என்றபெயரால் வழங்குகின்றனர். இதனை, 'அச்சுவத்தமென்றொருமா மதிலிரண் டரும்பறவைகளுண்டு" என்றற்றொடக்கத்து வேதவாக்கியங்களிற் சொல்லக்கருதியபொருளை மறைத்துச்சொல்லுதலால் அறியலாம்.

பெரும்புலவன்வாக்கில் வெளிப்படத்தோன்றும் பொருளைக்காட்டிலும் குறிப்பாற்றோன்றும்பொருளே சிறந்ததாகும் என்பது கவிமரபு. இதனால், "வந்தெதிரே தொழுதானை" என்னும் பாட்டில் கவிகருதியபொருளை வெளிப்படையாகக்கூறாது, குறிப்பாற் கொள்ளும்படி கூறியிருப்பது தவறாகாது.

இனி, எதிர்வழக்குடையார் சொல்லக்கருதியபொருளை வலியுறுத்தற்பொருட்டு, 'சக்கரவர்த்திதிருமகனாய்' என்று தொடங்கி ஆராய்ச்சிமுறையாலும் யுக்திவாதங்களாலும் இராமன் அவதாரபுருஷனல்லன் என்றும், குகன் பரதன் முதலானவர்களும் அவனைக் கடவுளென்று அறியவில்லையென்றும், அவதாரகற்பனை பிற்கால

வழக்கென்றும் தமக்குத் தோன்றியவாறு பல முடிபொருள்கூறி, சீராளர் பாரதியாரவர்களால் எதிருரை எழுதப்பட்டிருக்கிறது. அவற்றிற்கெல்லாம் இங்கு மறுமொழிகூறுமையே அமையும்.

இனி, அவ்வெதிருரையாளர்தாமே,

பத்திரா சிரியர் பக்க மிருந்து
வழக்குரை நன்கு வழங்குவ ராயின்
எத்திற மிருக்கும் அத்திறம் சிறிதிங்கு
ஆராய்ந் துரைக்கு மதனையும் கேண்மின்.

எதிர்வழக்குடையார்சொல்லும் விவகாரமூலம் :— செந்தமிழாசிரியர் எழுதுவதெதுவும் கற்றோர்கருத்தைப்பற்றுமென்றும், இப்பாட்டிற்கு அவரெழுதியவுரை கற்றோர்கருத்தைப்பற்றிவிட்டால் அறனழித்துத் தமிழ்மரபழித்துக் கேடுபயக்கும் என்றும், அக்கேடுவாராமைப்பொருட்டுக் கற்றோர்கருத்தை அவருரை பற்றாதிருக்கும்வண்ணம் அவ்வெதிருரை வரையவேண்டிற்று: என்றும் கூற்றாலும் குறிப்பாலும் கொள்ளக்கிடக்கிறது.—இதனை முதலில் ஆராய்வோம்.

கற்றோராவார், நீரொழியப் பாலுண்குருகுபோல ஆராய்ந்து வேண்டாதவற்றை விலக்கி, வேண்டுமவற்றைக்கொண்டு, கற்ற பின்னும் அதற்குத்தகநிற்பவராதலால் அவர்கருத்தைப்பற்றுவதெதுவும் கேடுபயக்கமாட்டாது; நன்மையேபயக்கும். இப்பாட்டுக்குச் செந்தமிழாசிரியரெழுதியவுரை கேடுபயக்கக்கூடுமாயின் அது கற்றோர்கருத்தைப் பற்றமாட்டாது; கேடுபயப்பதொன்று எவர் கருத்தைப்பற்றினும் அவர் கற்றவராகவும் மாட்டார்; ஆதலால் எதிர்வாதத்துக்கு விவகாரமூலமே இல்லையென்று தோன்றுகிறது. ஆயினும், அவ்விருதிறத்தார்கருத்தையும் புலப்படக்காட்டுதும்.

'வந்தெதிரே தொழுதானை' என்னும் பாட்டுக்கு உரை வரையக்கருதிய பத்திராசிரியர், அப்பாட்டை மூன்றுவாக்கியமாகக் கொண்டு, அவை,—

1. வந்து, எதிரே தொழுதானை வணங்கினன்.
2. மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனும் அவனடி வீழ்ந்தான்.

3. தந்தையினும் களிகூரத் தழுவினன், தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

என்பர்.

இவற்றை எதிர்வழக்குடையார் நான்குவாக்கியங்களாகப் பிரிப்பர். அவை:—

1. வந்தெதிரே தொழுதான்.
2. தொழுதானை வணங்கினன், மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனும்.
3. அவன் அடிவீழ்ந்தான்.
4. தந்தையினுங் களிகூரத்தழுவினன், தகவுடையோர் சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ்சீர்த்தியான்.

என்பன. இவற்றின் பொருந்தாமை பின்னர் ஆங்காங்கு விளக்கப் படும்.

இவற்றுள், பத்திராசிரியர் கொள்ளுமுறையில் முதல்வாக்கியத் தில் வந்து என்ற எச்சவினையை, முன்பு 'ஒருதனியே தான்வந்தான்' என்ற குறிப்பால், குகன்வினையாகக்கொண்டு, குகன் வந்து எனவும், 'திசைநோக்கித் தொழுகின்றான்' என்று முன்பு பரதனைக் கூறிய குறிப்பால், 'தொழுதானை' என்பதற்குத் திசைநோக்கித் தொழுதவ னுயுள்ள பரதனை எனவும் பொருள்கொண்டு, குகன்வந்து திசை நோக்கித்தொழுதவனுயுள்ள பரதனை வணங்கினன் என்பதே பத்திராசிரியருரைப்பொருள்.

இப்பொருளில், "வந்தெதிரே தோழுவோனை என்று இருக்க வேண்டும். தொழுகை இடையறவுபடாதொழுகும்நிகழ்ச்சியில் தொழுதோனை எனத் தொழில்முடிவுபெற்ற இறந்தகாலத்தாற் கூறுவது பொருந்தாது" என்பது எதிர்வழக்குடையார் மறுப்பு. புளித்தமோர், இனித்தபால், குளிர்ந்தநீர் முதலியவற்றில் புளித்தல் முதலியதொழில் இடையறாது நிகழாநிற்கவும் அவை இறந்தகால வினையால் வழங்குதலானும், இறைவனது ஆட்சி இடையறாது நிகழா நிற்க, அவனை ஆள்பவன் என்னாது, ஆண்டான் ஆண்டவன் என்று வழங்குதலானும், தோழுதல் இடையறாதநிகழ்ச்சிக்குறிப்பான கைகுவிப்பைக்கோண்டு 'தோழுதகையுள்ளும் படையொடுங்கும்'

என்று இறந்தகாலத்தால் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் கூறுத லானும் அது தவறில்லையென்று அறியலாம்.

மேலும், வந்து என்னும் வினையெச்சம், 'அடுத்ததைவிடுத்து அதன்மிசைக்குதித்துப் பிறகுவரும் மற்றொருவணங்கல்வினை யைத் தழுவுமென்பதிற் சிறப்பும் செவ்வியும் பிறக்குமாறில்லை' என்றும், 'அடுத்துவரும் எதிரேதொழும்வினையைத் தொடர் வதுவே இயல்பாகும்' என்றும் எதிர்வழக்குடையார் கூறுகிறார்.

வினையெச்சம் அதற்குச்சிறந்த முற்றுவினைகொண்டு முடி வதைவிட்டுச் சிறவாத (தொழுதான் என்னும்) வினைப்பெயரின் முதனிலைகொண்டுமுடிவது பொருந்தாது. அன்றியும், எதிரே யென்ற சொல்லால் இடையறவும் சேய்மைநிலையும் எதிர்வழக் குடையார்கூற்றிலும் உளவாம்.

இன்னும், வணங்கினன் என்பதற்கு இன்றியமையாத செயப் படுபொருள் இடைநிலையாயிருப்பது குற்றமாயின், 'இராவலன் சென்று ஈவோனையடைந்தான்' என்னும் வாக்கியத்திலும் அக் குற்றம் உளதாகக்கொண்டு, சென்று என்னும் வினையெச்சம், சேய்மையிலுள்ள அடைந்தான் என்னும் வினைமுற்றைக்கொள் ளாது, அண்மையிலிருக்கும் ஈவோன் என்னும் பெயர்முதனிலை கொண்டு முடியவேண்டும். இம்முடிபு இலக்கணங்கற்றோரொரு வர்க்கும் உடன்பாடாகாது.

மேலும், "குகன் தன்கடமையைவிட்டு முதலிலும் பரதன் தொழும்வரை வாளாவிருந்தான்" என்று பத்திராசிரியர் உரைபகர்வதாகப் பொய்ப்பொருள் படைத்துக்கொண்டு எதிர் வழக்குடையாரால் குற்றங்கூறப்படுகிறது. இது, 'எதிரேதொழு தானை' என்றது பரதனை என்ற பத்திராசிரியருரைக்கு 'இராமன் சென்ற திசைநோக்கித் தொழுதுவந்த பரதனை' என்பதே பத்திரா சிரியர் கருதியபொருள். அதனையழித்து, முதலில் பரதன் குகனைத் தொழுதான் என்றுகொள்வது படைத்துக்கொண்ட பொரு ளாகும். ஆதலால் அதுகொண்டுமறுக்கும் மறுப்புப் பயனற்ற தாயிற்று.

இன்னும், வணங்கினன் என்பதற்குக் 'குகன் வணங்கினன் என்பதாம்' என்ற பத்திராசிரியர்கூற்றைக்கொண்டுகூறிக்கொண்ட

எதிருரையாளர், பின்பு அதைவிட்டு, "முதலிலும் பரதன் தொழும் வரை தான் (குகன்) வாளாவிருந்து பின் பரதன் தன்னடிவிழுந்த பிறகும் தான் கும்பிடாது அவனைத் தழுவியமைதல் குகனைப் பாகவதனுக்காமல்" என்று தொடங்கிப் பத்திராசிரியருரையைச் செவிகைப்ப வெறுத்துப்பேசியது முன்னோடுபின்முரணுகிறது.

மற்றும், பத்திராசிரியர்கருத்து,—'வந்து' என்பதற்குக் குகன் தென்கரைநின்றுவந்து என்பதாம். 'எதிரே தொழுதானை' என்பதற்கு இராமன் சென்றதிசைநோக்கி இராமனைத்தொழுதுவரும் பரதனை என்பதாம். 'வணங்கினன்' என்பதற்குக் குகன் தன் தகுதிக்கேற்ப விழுந்து கும்பிட்டான் என்பதே பொருளாம். மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனும் என்று பரதனைச்சொல்லியது நம்மனோர் பரதன் பெருமையை அறிந்துகொள்ளக் கவி (கம்பர்) கூறியதன்றிக் குகன்கூறியதன்று.

இவற்றால் பத்திராசிரியர்கருத்து நிர்விவாதமாயிற்று.

இதனை மறுக்கும் எதிர்வழக்குடையார் கருத்தும் இங்கு ஆராயத்தகும். அவர்கருத்து:—குகன்வந்து பரதனெதிரே தொழுதான்; அங்ஙனம் தொழுத குகனை மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனான பரதன் வணங்கினன் என்பதாம்.

இப்பொருளுக்கு 'வந்தெதிரே தொழுதானை வணங்கினன்' என்று ஒருவாக்கியமாயிருப்பதை, வந்து எதிரே தொழுதான், தொழுதானை வணங்கினன் என இரண்டுவாக்கியமாக்கும் இடர்ப்பாடு தோன்றுகிறது. தொழுதானை என்னும் இரண்டனுருபேற்ற பெயர்ச்சொல்லே வந்து என்னும் வினையெச்சத்துக்கு வினைமுற்றாயும், வணங்கினன் என்னும் வினைமுற்றுக்குச் செயப்படுபொருளுணர்த்தும் பெயராயும் நிற்குமென்றுகொள்ளுதல் பெரிதும் இடர்ப்பாடுடையதாம்.

இன்னும் செந்தமிழாசிரியர்கருத்துக்கு 'வந்தெதிரே தொழுதானை வணங்கினன்' என்பது, குறிப்பால் வந்த குகன் என்னும் எழுவாயும், வணங்கினன் என்னும் பயனிலையும், எதிரே தொழுதானை என்னும் செயப்படுபொருளும் உடையதாய்க் குகன்வந்து திசைநோக்கித் தொழுதவனாயுள்ள பரதனை வணங்கினன் என்னும்

பொருள்பட்டு ஒருவாக்கியமாய் முற்றுப்பெற்று நிறைநிலையா யிருக்கிறது.

எதிர்வழக்குடையார்க்கு வணங்கினன் என்னும் முற்றுச் சொல் தலைதடுமாறி முதலில் நின்று அதற்கு எழுவாயென்னும் எச்சம்பெறுமல், குறைநிலையாய்ப் பின் 'அந்தணனும் தனை வணங்குமவனும் அவனடி வீழ்ந்தான் என்னும் வாக்கியத்தின் எழுவாயைக் கொண்டுமுடியநிற்கிறது.

நிறைநிலை குறைநிலையாகிய இரண்டனுள், நிறைநிலைப்பொருள் கொள்வதே சிறந்தது. இதனுலும், பத்திராசிரியருரை சிறப்பும் செம்மையும் உடையதாயிற்று.

இனி, 'மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனும் அவனடிவீழ்ந்தான்' என்னும் இரண்டாம்வாக்கியத்துக்குப் பிரும்மதேவனும் வணங்குதற்குரிய பரதனும் தன்னைத் தொழுதுநின்ற குகனடியில் விழுந்து தெண்டனிட்டான்: என்றுர் பத்திராசிரியர்.

இதுதான் எதிரிகளுக்கு மிகவும் விவாதாஸ்பதமாயுள்ளது. அதாவது—உயர்ந்த க்ஷத்ரியஜாதியானுய் அரசியற்குரியனுயுள்ள பரதன், தாழ்ந்த வேடஜாதியானுய்த் தன்னை வந்து வணங்கினவனுகிய குகனடியில்வீழ்ந்து வணங்கினன் என்பது தமிழ்கூறுநல்லுலகத்து மரபழித்து அறமழிக்குமென்று எதிர்வழக்குடையார் கருதுகிறுர்கள். உலகியல்வழக்கால் அவர்கள்கூறுவது உண்மையே; ஆனல், பரதன், உலகியல்வழக்கான பசுதர்மங்களையொழித்துப் பதிதர்மமான இறைவனடித்தொழும்பைமேற்கொண்டொழுகுமவன் என்பதை, 'வையமையல் தோன்றுநெறிவாழ் துணைத்தம்பி' என்று இராமபிரான் கூறுதலால் அறியலாம். உலகமையல்தோன்றுத (உலகப்பற்றற்ற) பரதனெழுக்கத்தை உலகமையலுடையாரொழுக்கங்கொண்டு குற்றங்கூறுதல் சற்றும் பொருந்தாது. இவ்வொழுக்கம் அறனழித்ததாமாயின், 'ஈன்றுளின் என்ன கடவுளும் இல்' என்று நீதிநூல்சொல்லிய நல்லறவொழுக்கிற்குமாறுகத் தன்பெற்றதாயாகிய கைகேயியைநோக்கி,

'நீயினை யிருந்தனை யானு நின்றனென்
ஏயெனு மாத்திரத் தெற்று கிற்றிலேன்
நாயகன் முனியுமென் றஞ்சி னேனலாற்
றாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ'

என்று அவளைக் கொலைபுரியக்கருதிய பாதன், இராமபிரான்முனியுமென்று அதுசெய்யாதொழிந்தேன் என்றான். இதனால் பரதன் அறனழிவுசெய்த மாத்ருத்ரோகியானானா? ஆனால், அவனை 'எனைத்துள மறையவை யியம்பற்பாலன, பனைத்திரள் கரக்கரிப் பாதன் செய்கையே' என்றும், 'சேணுயர் தருமத்தின் தேவு' என்றும் இராமபிரான் கூறுவனா?

இன்னும் மாபழிக்கும் என்பதற்கு அவர், தமிழ்கூறுநல்லுலகத்து மரபு இன்னதென வரைந்துசுட்டியதாயில்லை. ஆனால் இடம்நோக்கிச் சாதிமுதலியவற்றாலுயர்ந்தோர் அவற்றால் தாழ்ந்தோரை வணங்கலாகாதென்பதே அவர்க்குக் கருத்தாயிருக்கலாமென்று தோன்றுகிறது. சாதிமுதலியவற்றின் வேற்றுமைகருதாதொழுகவிரும்பும் இக்காலத்தில் அவ்வேற்றுமைகருதி ஒழுக்கநிலைநிறுவும் எதிர்வழக்குடையார்மனப்பான்மை பாராட்டத்தக்கதே. ஆயினும், அதுவே தமிழ்கூறுநல்லுலகத்துமரபென்றுநாட்டுதற்கும் இடமில்லை.

"மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு"

என்று சாதிபற்றிய உயர்வையும்,

"ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்"

என்று முறையும் மூப்பும்பற்றிய உயர்வையும் உலகியற்பொருளான தமிழ்கூறுநல்லுலகமே ஒருநிமித்தம்பற்றிப் பழித்துத் தாழ்த்திருக்கும்போது அறிவனூற்பொருள்பற்றிய உயர்வு தாழ்வுகள் ஆராயவேண்டாவென்றறியலாம்.

இன்னும், "சக்கரவர்த்திதிருமகனாய் இராமனிழந்த இறைமைக்குரியனாய்.......நாட்டையாளும்வேந்தனாய்விளங்கும் பரதன்" என்கிறார் எதிர்வழக்குடையார். பரதனை அரசனாகக்கருதும் கருத்து, உலகியல்வழக்குடைய பிறருக்குள்ளதேயன்றிப்பரதனுக்

கேனும் அல்லது இராமாவதார நூலியற்றிய புலவர்பெருமானுக் கேனும் உள்ளதாகுமா? பரதன், 'எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும் அந்தமில் பெருங்குணத்திராமன்........' என்று இராம பிரானையே தந்தையாகவும் தாயாகவும் இறைவனாகவும் தமைய னாகவும் தான் அவனுக்கு அடியவனாகவும் கருதியிருப்பதை அவன் வாக்கால் கம்பர்கூறுதலால் அக்கருத்துப் பரதனுக்குமில்லை; கம்பருக்கும் இல்லையென்பது தெளிவு.

அன்றியும், உயர்ந்தசாதியான மக்களுட் சிறந்த அந்தணரும், மக்கட்சாதியிற் றாழ்ந்தசாதியாய்த் தாவரவர்க்கத்திற் சேர்ந்த அரசு துளசி வில்வம் நெல்லி முதலியவற்றை வலம்வந்து வணங்கிப் பூசனைபுரிவதும், ஆகாயத்திற் பறக்கும் பறவைவிசேடமாகிய கலுழனைத் தரிசிக்கவேண்டித் தேடிச்சென்று கண்டவுடனே கன்னத்திலடித்துக்கொண்டு கையெடுத்துக் கும்பிடுவதும் தமிழ் கூறுநல்லுலகத்து மரபழியாத நல்லறமாம்போது, அவற்றுளெல் லாம் உயர்ந்தசாதியந்தணாளர்க்குரியநிலையில் வைத்தெண்ணப் பெற்ற குகனை அந்தணரிற் றாழ்ந்த அரசகுலத்தவனான பரதன் வணங்கினான் என்பதும், தமிழ்கூறுநல்லுலகத்து மரபழியாத உயர்நிலையறமேயாம். இம்முடிபை,

"மருமன்னு தாம நெடுமால் பதத்தின்
மனமன்பு மேவு மவர்சூத்
திரரன்று பாக வதரென்றும் மேன்மை
திகழந்தணாளர் எனவும்
உரைதங்கு வேத குலரான போதும்
உயர்மால் பதத்தி லுறவைப்
பிரிநெஞ்சர் சூத்தி ரர்களாவ ரென்று
பிரமாண்டம் ஓதி யிடுமே."

என்பதனாலும் அறியலாம். ஆதலால், பரதன் குகனடிவீழ்ந்தான் என்றது தவறாகாது.

அன்றியும், இங்கு உலகியல்புபற்றி உயர்ந்தவன் தாழ்ந்தவனை வணங்கலாகாது என்பதில் கவிகருத்திருக்குமாயின், வணங்கினான் எனத் தாழ்தற்குரியவினைக்கு எதிர்வழக்குடையார் வினைமுதலாகக் கருதும் பரதனை, 'அந்தணனும் தனைவணங்குமவனும்' என்று

உயர்த்துக்கூறுதல் பொருத்தமற்றதாம். ஆகவே எதிர்வழக்குடையார்சொல்லும் உலகியற்பொருளிற் கவிகருத்தில்லையென்று அறியலாம். ........

மேலும், உலகியலொழுக்கில் உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் ஆகிய இருவருள் உயர்ந்தோரைத் தாழ்ந்தோர் வணங்குதலும், வணங்கிய தாழ்ந்தோரை உயர்ந்தோர் வாழ்த்துதலுமே முறை. இம்முறையின்றி எதிர்வழக்குடையார்கருத்தின்படி, முறையே தாழ்ந்தோனும் உயர்ந்தோனுமாகிய குகபரதரிருவரும் ஒருவரை யொருவர் வணங்கினர் என்று எதிர்வழக்குடையாரும் பொருள் கொள்ளும்படி கவிகூற்றிருத்தலால் உலகியல்வழக்கிற் கவிகருத்தில்லையென்பது வெளிப்படை. ஆகவே, உலகியலொழுக்கத்தின் வேறான பாகவததர்மத்திலேயே கவிகருத்துள்ளதாயிற்று.

கவிகருத்து இங்ஙனமிருக்கவும், எதிருரையாளர் ஆன்றோரொழுக்கமாகிய சங்கமபத்திக்கொள்கையை மிக வெறுத்துப்பேசுகிறார். உலகியல்பொடுமாறுபட்ட அது நம்மனோர்மனங்கொண்டு நோக்குங்கால் வெறுப்புக்கு இலக்காயுள்ளதே. அவ்வாறே நம்மனோரொழுக்கமாகிய உலகியலொழுக்கத்தை வெறுத்துப் பகைத்துத் தொலைத்தமையாலே இயற்பகை என்று பெயர்பெற்ற நாயனார் உயர்ந்தோர்குழுவிடைவைத்துப் பூசிக்கப்படுகிறார். இதனால் அறவொழுக்கங்களை நம்மனோர் நெஞ்சுகொண்டு இவை நல்லவென்றும், இவை தீயவென்றும் துணிதல்கூடாது; அவ்வொழுக்குடையோர்நெஞ்சுகொண்டே முடிவுரைக்கவேண்டும் என்பதாயிற்று.

இயற்பகைநாயனார், யான் எனது என்னும் செருக்கற்றவராய்த் தம் உடல் பொருள் ஆவி என்னும் இவற்றையெல்லாம் ஈசுவரார்ப்பணஞ்செய்து இறைவனுக்கும் அவனடியார்க்கும் அடிமையாய் அவரடித்தொழும்புபுரியும் அறிவனூலொழுக்கினராதலால், இறைவனடியாரொருவர் தம்மிடத்தொன்றை விரும்பிவந்தபோது அவரை இறைவனாகவேகருதி, அவ்விறைவனுடைமையான அவ்விரும்பியபொருளை, அவ்விறைவனாகக்கருதிய அடியார்க்குதவினமையால் அவர்க்கு அது குற்றமாகாது, இறைவன்வழிபாடேயாயிற்று. அவர் தம் இல்லறக்கிழத்தியாரும், தெய்வந்தொழாது கொழுநற்றொழுதெழும் கற்புக்கடன்பூண்ட மாபெருந்

தெய்வமாதலால் தன் கொழுநன்சொற்றிறம்பாதொழுகலே கொழுநன்வழிபாடென்னும் கருத்தால் இசைந்தொழுகியது அவர் கற்பிற்குச் சிறப்பாயிற்று.

இத்தகைய நுணுகிய கருத்துக்களெல்லாம் வெளிப்படக் கூறலாகாதென்பதுபற்றி மறைத்துச்சொல்லப்படுதலால் அவை மறைப்பொருளாயின. இத்தகைய நுண்பொருள்களெல்லாம்— அறிவனூல்பலவும் நல்லாசிரியரைவழிபட்டுக் கற்றுக் கேட்டுத் தெளிந்த பேரறிவுடையோரால் கொள்ளத்தகும். உலகியலொழுக்க முடையார்க்கு இத்துணையிழிவானதொருசெயல் இல்லை. உலகப் பற்றற்ற உயர்ந்தோர்மனங்கொண்டு நோக்குங்கால் அதனின் உயர்வான பிறிதொருசெயல் இல்லை என்பது தோன்றும். ஆதலால் அறிவனூலொழுக்கம் உலகியலொழுக்கின் மாறுபட்டிருப்பினும் ஒழுகுவார்மனநிலைகொண்டு அவ்வொழுக்கத்தின் உயர்நிலையறிய வேண்டும்; நம்மனோர்மனநிலைகொண்டு அறியலாகாது. இக்கருத்துக் கொண்டே தெய்வப்பாடலுடையாரொருவர் "என்னெஞ்சினால் நோக்கிக்காணீர் என்னை முனியாதீர்" என்கிறார்.

இக்கருத்துக்கொண்ட கம்பநாடர், அரசர்குலத்தவனுயுயர்ந்த பரதன், வேடர்குலத்தவனுய்த் தாழ்ந்த குகனை வணங்கினன் என்று கவிகூறியது தகாதென்று ஒருசிலர் எதிர்வாதஞ்செய்யவுங் கூடுமென்று எண்ணி, அவரறிவுநோக்கிப் பரிகசிப்பாராகி, நீங்கள் பரதனுக்கு உயர்வுகூறக்கருதி, அவன் மக்கட்பிறப்பினரால் வணங் கற்குரிய பெருமையுடைய அரசியற்குரியோன் என்கிறீர்கள்; அவ னுக்கு அது ஒரு பெருமையாகாது; மக்களால் வணங்கப்பெறும் தேவர்களாலும் வணங்கப்பெறும் பிரமனாலும் வணங்கப்பெறு மவன் என்று அவனுயர்வை யான் அறிந்த அளவு நீங்கள் அறிந் தீர்களில்லை: என்னுங் கருத்தால், 'மலரிருந்த அந்தணனும் தனை வணங்குமவன்' என விலக்கணிநடைகொண்டு அவனுயர்வுமிகவு காட்டிக்கொண்டே, பின் அவன் குகனைப்பணிதல் இழிவென்கிறீர் கள்; நான் அவ்வளவில் நில்லாது அவனடிவீழ்தல் அவனுக்கு உயர்வென்கிறேன்: என்பார்போல 'அவனடிவீழ்ந்தான்' என்றூர். இஃது என்போலவென்னில் கவியரசாகிய காளமேகப்புலவர்,

குடத்திலே கங்கையடங்கப் பாடும்படி சமத்திகொடுத்த புலவரை நோக்கிக் குடத்திலடங்காதபெருமையுடைய கங்கையை அதற்கோ ரிழிவுண்டாகும்படி குடத்திலடங்கும் என்று பாடச்சொல்லுகிறீர் கள்; அது (கங்கை குடத்திலடங்காமை) அதற்கு (கங்கைக்கு) ஒரு பெருமையன்று: என்னும் கருத்தால்,

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்"

என்று கங்கையின் அடங்காமையை மிகுத்துக்கூறி, அது குடத்தி லடங்குதல் அதற்குச் சிறுமையென்றெண்ணிப் பழிக்கப்பார்க்கிறீர் கள்: குடமல்லாக்குடத்தில் (மட்குடமல்லாத ஒரு மயிர்க்குடத்தில்) அடங்குதல் அதற்கு உயர்வென்றுகொண்டு அதனை நான் துதிக் கின்றேன் என்னுங் கருத்தால்,

"பெண்ணை—இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கையடங்கும்"

என்று கூறினாற்போல என்க.

இதனால் இறைவன்வழிபாட்டினும் அடியார்வழிபாடு சிறந்த தென்பதும் அதனினும் அவரடித்தொழும்பு சிறந்ததென்பதும் அறிவனூற்பொருளாமென்று பரதனொழுக்கங்கொண்டு காட்டிய வாறுயிற்று.

இவ்வாறு கருத்துடையடைகொடுத்துக் கவி பரதனை யுயர்த் துக்கூறியது எதிர்வழக்குடையார்க்குப் பயனற்றதாயும், அவரை வழக்கிழக்கச் செய்வதாயும் இருத்தலேயன்றிப் பத்திராசிரியர்க்கு, 'எத்துணை—உயர்வுடையோர்க்கும் பகவத்ப்ராப்தியடைந்த பாக வதர் பூஜ்யராவர்' என்னும் பொருள்தந்து பயனுடையதாய் நின்று, எதிர்வழக்குடையார்கொள்கைக்கே விரோதமாயிற்று.

இதுகாறுங் கூறியவாற்றல் இருதலைவழக்குடையாரும் தத்தங் கருத்துக்கொண்டே கவிப்பொருளாராயாது கவிகருத்தறிந்து பொருளுரைக்கவேண்டும் என்பதும், கவியும் கதைகூறுமிடத்துத் தம்கருத்துக்கொண்டே செய்யுளியற்றாது கதைக்குரியோர் (கதா பாத்திரங்கள்) கருத்துக்கொண்டே கதைகூறவேண்டும் என்பதும்

பெறப்படும். ஆதலால், கதைக்குரியோர்கருத்தைக் கவிகருத்துக் கொண்டே நாம் இங்கு ஆராய்தல் தகும்.

கவி பரதனை 'மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவன்' என்கிறார். மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனுயுர்ந்த பரதன் எவனடிப்பணிவான்? பரம்பொருளான கடவுளடிபணிவான். பரதன்பணியுங் கடவுள் யாவன்?

'எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
அந்தமில் பெருக்குணத்திராம ஞதலால்
வந்தனை அவன்கழல் வைத்த போதலாற்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலாது'

என்று பரதனே கூறுதலால் அவன்முன்னேனுன இராமபிரானே பரதன்பணியுங் கடவுளாவன். குகனைப் பரதன் எவனுகக் கருதினுன்? 'என்முன்னே' என்று இராமபிரானுகவே கருதினுன். அங்ஙனங்கருதிய பரதன் இராமனடியில் விழுவதுபோலக் குகனடியில் வீழ்ந்தான் என்றது தகுமா? தகாதா? (தகும் தகும் தகும்.) அப்படியானுல், குகனைப் பெருமாள் என்றும், பரதனை ஆழ்வானென்றும் சமயமரபுபற்றிச்சொல்வது தவருகாதே? (ஒருபோதும் தவருகாது).

அன்றியும், எதிர்வழக்குடையார்கருத்துப்படி, "வந்தெதிரே தொழுதானை வணங்கினுன் மலரிருந்த அந்தணனுந்தனைவணங்குமவனும்" என்ற அளவில், குகன்வந்து பரதனைத் தொழுதான். அங்ஙனம் தொழுத குகனை அந்தணனும் தனைவணங்குமவனுன பரதன் வணங்கினுன்: என்று ஒருவரையொருவர் தொழுதலும் வணங்கலுமாகிய மரபழியாவழிபாடே கூறியதாயிற்றே. இனி, அவருள் ஒருவர்தொழுகையும் கூறவேண்டாமையால் அவனடிவீழ்ந்தான் என்பது பொருளற்றதும் வேண்டாகூறலும் கூறியதுகூறலுமாம். எங்ஙனமெனில், அவன் அடிவீழ்ந்தான் என்பது எதிர்வழக்குடையார்கருத்துப்படி மூன்ரும்வாக்கியமாகும். இதில் அவன் என்று சுட்டப்பட்டவன் யாவன்? அவன் எவனடிவீழ்ந்தான்? என்பன ஆராயத்தகும். அவன் என்று

சுட்டப்பட்டவன் குகன் எனக்கொள்ளில், 'அவன் அடிவீழ்ந்தான்' என்பதற்குக் குகன் பரதனடியில்விழுந்தான் என்றே பொருள் கொள்ளவேண்டும். அப்பொருள் எதிர்வழக்குடையார்க்கு வந்தெதிரே தொழுதான் என்ற அளவில் தகுதிநோக்கி அடிவீழ்ந்து தொழுதான் என்று பெறப்பட்டதாய்விட்டது. அதனை மறித்தும் உரைத்தல் வேண்டாதுகூறல்; கூறியதுகூறலுமாம்.

மேலும், தாழ்ந்தசாதியானான குகனை உயர்ந்தசாதியானான பரதன் வணங்கினான் என்று கூறுவது தவறுமென்னும் எதிர்வழக்குடையார், 'மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவன்' என்பதற்கு மக்கட்பிறப்பினனாகிய பரதனைத் தேவரினும் உயர்ந்த பிரமனும் வணங்குமவன் என்று கூறும் பொருளை உடம்படுதலால் தம்வழக்கிழந்தவராகிறார்.

இனி மூன்றாம்வாக்கியமான "தந்தையினுங் களிகூரத்தழுவினான் தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்" என்பதற்கு இருபக்கத்தாரும் சொற்பொருளில் வேறுபடாது கருத்துப்பொருளில் மாறுபடுகிறார்கள்.

அவருள், பத்திராசிரியர், தகவுடையோர்சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ்சீர்த்தியானான குகன், தன்னடி வீழ்ந்த பரதனை அவன் தந்தையையிழந்துவருந்தும் அவ்வருத்தந் தீர இறந்த தந்தையான தசரதனே எழுந்துவந்து தழுவினால் அவ்வருத்தமுந் தீர்ந்து எத்துணை மகிழ்ச்சியுமுண்டாகுமோ அத்துணை மகிழ்ச்சியினும் மிக்கமகிழ்ச்சியுண்டாகுமாறு தழுவினான் என்கிறார். இக்கருத்து மிக்க பொருணயமுள்ளது.

எதிர்வழக்குடையார், அடிவீழ்ந்தானாகிய குகனைப் பரதன், குகனுடையதந்தையே வந்து தழுவினால் எத்துணைமகிழ்ச்சி குகனுக்குண்டாகுமோ அத்துணைமகிழ்ச்சியினும் மிக்கமகிழ்ச்சி குகனுக்குண்டாகுமாறு தழுவினான் என்கிறார். இது, பொருட்சிறப்பிலதாவதேயன்றிக் குகனுக்குத் தம்பியாயுள்ள பரதனை அவனுக்குத் தந்தையாம்நிலையில் வைத்தலால் முறைபிறழ்தலும் ஆம்.

இங்கு 'தந்தையினும்' என்ற உறழ்வுக்கும் உம்மைக்கும் பத்திராசிரியருரையில் பொருட்பொருத்தம் உள்ளது. அது—பரதனுக்குத் தசரதன் உடற்றொடக்குடைய (சரீரபந்துவான) தந்தை; இராமன் உயிர்த்தொடக்குடைய (ஆத்மபந்துவான) தந்தை. உடற்றொடக்கும் உயிர்த்தொடக்கும் உடைய இவ்விருதந்தையருள், உயிர்த்தொடக்குடைய தந்தையே சிறந்தோன். ஆதலால் உடற்றொடக்குடைய தந்தையான தசரதனிலும் உயிர்த்தொடக்குடைய சிறந்த தந்தையான இராமனே வந்து தழுவினால் பரதன் எத்துணை மகிழ்வானோ அத்துணைமகிழ்ச்சி குகன் தழுவுதலால் பரதனுக்கு உண்டாகியது என்பது. இவ்வநுபவம் பரதன்கண்டது என்பது தோன்ற, 'இன்றுணைவன் இராகவனுக் கிலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்' என்று பரதன்கூற்றாலே துணைவன் என்பதனால், குகனுக்கு இராமனோடு சரிஜோடியான ஒப்புக் காட்டினமை இங்கு நோக்கத்தகும். துணை ஒப்பும் இரட்டையுமாய் இராமனுக்குப் பரமசாம்யன் என்பதாயிற்று. இப்பொருணயங்களையெல்லாம் எதிர்வாதத்தில் இழந்துவிடுதல் இரங்கற்பாலதே.

இம்மட்டிலன்றித் தழுவினவன் யாவன்? என்ற அவாய்நிலைக்கு விடையாக, 'தகவுடையோர்சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்' என்று மஹாகவி விடைகூறியுள்ளார். இவ்விடையால் தழுவினவன் குகன் என்றேனும், அல்லது பரதன் என்றேனும் வெளிப்படக்கூறினரில்லை. அவர் இங்கு வெளிப்படக் கூறாதகாரணம் கருத்துடைபடையால் வெளிப்படுத்தியுள்ளார். அதாவது—அறிவனூற்பொருளும் உலகியற்பொருளுங்கொண்டு வாதியும் எதிரியுமாய்நின்று வாதாடும் இருபக்கத்தார்வழக்கினிடையே நான் ஒருதலைப்பக்கமாக வெளிப்படச்சொல்லுதல் இயலாது; இருவருள் உயர்வு(சீர்த்தி) உடையோனே தழுவினோனவன்; இங்கு அவ்வுயர்வுடையோன் இன்னான் எனச் சொல்லுதற்குரியோர் தகவுடையோர் என்னும் நடுவுநிலைமையுடையோரேயாவர். அவர் இருதலைவழக்கையும் கேட்டு ஆராய்ந்து உரைமுடிவுகண்ட சிந்தையிலும், (உரைமுடிவுகூறும் மொழியிலும்,) இவ்வொழுக்கம்

தக்கதென்னும் குறிப்புணர்த்தும் முடிவணக்கத்தும் (அதாவது மனம் மொழி மெய் என்னும் திரிகாரணங்களிலும்) எவன்பெருமை (சீர்த்தி) வீற்றிருக்குமோ அவனே தழுவினவனுவன் என்றுகூறி, அவர்கொடுக்கும் செயபத்திரத்தால் அந்நடுநிலையுடையாரது சமன் செய்து சீர்தூக்குங் கோல்போன்ற சிந்தையில் இருவருளொருவனுன பரதன், தன்னை ராமதாஸனுகவும் குகனை ராமதுல்யனுகவும் கருதுதலால் குகனேமேலானவன் என்றுகொண்டு நன்குமதிக்கப்பெற்றதாயும், அவர்கள் தலையால் தாங்கப்பெற்றதாயுமுள்ளது குகனுடைய சீர்த்தி (மேன்மை) என்று அறியக்கிடக்கிறது; அதுகொண்டே அடுத்தசெய்யுளில், 'தழுவின புளிஞர்வேந்தன்' என்பதனுல், தழுவினவன் குகன் என்றும், அதனுலேயே தழுவப்பட்டவன் பரதன் என்றும் வெளிப்படுத்தினேன்: என இத்துணைகருத்துக்கள் அடங்கத் 'தகவுடையோர்சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்' என்முர் என்று தோன்றுகிறது. இங்ஙனங் கொள்ளாக்கால் தகவுடையோரைக்கொண்டு சீர்த்தியை விசேடித்ததனுல் ஒரு பயனும் இன்றும். பத்திராசிரியருரைக்கு, தகவுடையோர், சீர்த்தி, சீர்தூக்குங்கோல்: இவை லிங்கங்களாம்.

இவ்வாறுகொள்ளுதலையொழித்துக் 'குகனைப் பரதன் தழுவினுன்' என்பார்க்கு இக்கருத்துடையடையின் பொருட்பொருத்தம் சிறிதும் இல்லை.

இனித் 'தழுவின புளிஞர்வேந்தன்' என்பதில், 'தழுவின' என்னும் பெயரெச்சத்தை வெளிப்படைப்பொருளுள்ள செய்வினையாகக்கொள்ளாது, குறிப்புப்பொருளுள்ள செயப்பாட்டுவினையாகக் கொண்டு, தழுவப்பட்ட புளிஞர்வேந்தன் என்றும் அதனுல் தழுவினவன் பரதன் என்றும் எதிர்வழக்குடையார் கருதுகிறுர்கள்.

சொற்பொருளுக்குப் பொருத்தமில்லாத இடத்தில் குறிப்புப் பொருள்கொள்வது முறை. அங்ஙனமின்றிச் சொற்பொருட்குப் பொருத்தமுள்ளவிடத்தும் செய்வினைச்சொற்குச் செயப்பாட்டு வினைப்பொருள்கொள்வது இடர்ப்பாடுடையதாம். அதனுல் அதுவும் அவர்க்குப் பொருந்தாதாயிற்று.

தமிழ்வழக்கிற் செய்வினைக்குச் செயப்பாட்டுவினைப்பொருளுண்டென்பதுகொண்டு உண்டசோறு, உடுத்தஆடை, ஈட்டிய பொருள்: என்னுந்தொடர்களில் முறையே உண்ணப்பட்டசோறு, உடுக்கப்பட்ட ஆடை, ஈட்டப்பட்டபொருள் எனச் செயப்பாட்டு வினைப்பொருள்தோன்றுவதனால், 'தழுவின புளிஞர்வேந்தன் என்பதிலும் தழுவப்பட்ட புளிஞர்வேந்தன் என்று செயப்பாட்டு வினைப்பொருள் தோன்றக்கூடும் என்கிறார்கள்.

அவர்கள்காட்டும் உதாரணங்களை ஆராய்வோம். உண்ட சோறு என்பதிற் சோற்றுக்குப் பிறிதொருசோற்றை யுண்ணுமியல் பின்மையாலே அது உண்ணுதற்றொழிலில் வினைமுதலாதற்குத் தகுதியற்றதாயிற்று. அவ்வாறே உடுத்தஆடையென்பதில் ஆடை பிறிதோராடையையுடுக்குந் தகுதியற்றிருப்பதும், ஈட்டியபொருள் என்பதில் அப்பொருள் பிறிதோர்பொருளை யீட்டுந்திறமற்றிருப் பதும்நோக்கிச் செயப்பாட்டுவினைப்பொருள்கொள்ளப்படுதலால் அவை காட்டாகமாட்டா. அன்றியும், வினைமுதலும் செயப்படு பொருளுமாகிய இரண்டனுள் முன்னதாயுள்ள வினைமுதற் பொருண்மையைவிட்டுப் பின்னதாகிய செயப்படுபொருண்மை யைக்கொள்ளுதலும் முறைதவறுதலாகும்.

இனி 'மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்' என்பதற்குப் பத்தி ராசிரியருரை பொருத்தமற்றதாகத்தோன்றுமாயினும், அவர்க்கு முன்பு குகன்'வந்து (பரதனை) வணங்கினன்' என்ற வணக்கம் உலகியலும் தகுதியும்நோக்கி மண்ணிடை வீழ்ந்த வணக்க மென்று தெளியக்கிடத்தலால், அதனை நினைத்து 'மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்' என்று மறுமுறை வணக்கங்கூறினர் எனத் திருத்திக்கொள்ளவுங்கூடுமாதலால் . அவருரை குற்றமற்ற தாயிற்று.

மற்றும் எதிர்வழக்குடையார்கூறுமவற்றையெல்லாம் ஆராயப் புகின் மிக விரியுமென்று அஞ்சி இம்மட்டில் நிற்போம்.

ஆயினும், 'பத்திராசிரியருரை வியப்பைத்தந்தது' என்று. சொல்லியிருப்பதைமட்டும் இங்குச் சிறிது ஆராய்வோம். அவ்

வியப்பு எதிர்வழக்குடையார்க்குப் புதுமைபற்றித்தோன்றியதா யிருக்கவேண்டும். அப்புதுமை பத்திராசிரியருரைக்கு ஒருபோது மில்லை.

(பத்திராசிரியர், 'வங்தெதிரேதொழுதானை' என்று தொடங் கும் செய்யுளுக்கு வரைந்தவுரை புதிதன்று. தொன்றுதொட்டு வரும் ஆன்றோர்வழக்கும் அறிவனூற்பொருளுங்கொண்டு வரைந்த தே.) இதனை, ஆங்கிலமொழிப்புலமையோடு தமிழ்ப்புலமையும் நிரம்பியவராயும் சிறந்த கவிஞராயும் பல அரியதமிழ்நூலாசிரியரா யும் கவிநுட்பங்களையறிந்து ஆசிரியர்கருத்தொடு விரித்து விளக்கும் உரையாசிரியராயும் திகழும் வெள்ளகால் சீராளர் ராவ்ஸாஹிப் வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள் செந்தமிழில் தாம் தொடர்ந்தெழுதிவந்த கம்பராமாயண இன்கவித்திரட்டு* என்னும் பொருளுரையில் இச்செய்யுளுக்கு இற்றைக்குப் பல ஆண்டுகளுக்குமுன்னமே எழுதிய திருத்தவுரையாலும்,† கம்ப ராமாயணநூலுரையாசிரியரான ஸ்ரீ. வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியரவர்கள் பல ஆண்டுகளுக்குமுன்னமே இச்செய்யுளுக்கு எழுதி வெளியிட்டுள்ள உரையாலும் நன்கு அறியலாம். இவ்வுரை யளிக்கும் வியப்பாலுண்டாகும்பெருமை அவர்க்குரியதே. ஆத லால் இவ் வெதிர்வழக்குப் பத்திராசிரியர்மேல் தொடுக்கத்தக்க தன்றாயிற்று: (என்று அவ்வெதிருரையாளர்விரிவுரை யிருக்கும்).

இங்கு அவ்வெதிர்வழக்குத்தொடர்ந்த ஒரு வைதிக வைணவ நண்பரென்பவர்வேண்டுகோட்கிணங்கி, அவர்கருத்துக்கொண்டு ஆங்கிலக்கல்வியும் அருந்தமிழ்ப்புலமையும் நிரம்பிய வழக்குரை யாளரான சீராளர் S. S. பாரதியாரவர்கள் விரித்துரைத்த ஓர் எதிருரையென்னும் விரிவுரையால் பற்பல நுண்பொருள்களுள்ள உரைமுடிவுகளையும் கம்பநாடர் கவியின்பநுகர்ச்சியையும் தந்தமை யால் தமிழறிஞர் அவ்விருவர்க்கும் நன்றிபாராட்டல் தகும்.

---

* இப்பால் இது கம்பராமாயணசாரம் என்ற பெயருடன் செந்தமிழில் வெளிவருகிறது.

† செந்தமிழ்த்தொகுதி—25, பக்கம் ௪0௧—௪0௨.

ஸ்ரீ:

# நாசிக்கொடுமையும் நமது கடமையும்.*

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப்பத்திரிகையின் உதவியாசிரியர்

T. K. இராமாநுஜையங்கார் இயற்றியது.

["தாயின் மணிக்கொடி பாரீர்—அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்"
என்று தொடங்கும் பாரதியார் பாடற் சந்தம்.]

## I. நாசிக்கொடுமை.

1 நாசிக் கொடுமையைப் பாரீர்—அதை
நாடிக் களைந்து துரந்திட வாரீர்
தேசத் துரோகிக ளானுர்—இவர்
செய்யுங் கொடுமைகள் செப்பிடப் போமோ. (நாசிக்)

2 பூதல முற்றும் தமது—புலைப்
பொய்யுரை செல்லப் புரந்திட எண்ணி
மேதினி யாள்பவர்க் கென்றே—புகல்
மேலை யறநெறி கைவிட்டு விட்டார். (நாசிக்)

---

* இது, முதலில் மதுரைஜில்லா யுத்தப்பிரசாரசபையின் ஆதரவில் 29-8-40-ல் கொடிக்குளம் கிராமத்தில் நிகழ்ந்த மகாஸபையிற் படிக்கப் பட்டது; பின், 3-9-40-ல் ஷை கமிட்டியின் ஆதரவில் மதுரை வையை மைய மண்டபத்தில் மஹாயுத்தம் தொடங்கி ஒருவருஷமானதுகுறித்து நடந்த மஹாஸபையில் மதுரை ஸ்ரீமீநாக்ஷிவித்யாசாலை மாணவிகளால் இசையுடன் பாடப்பெற்றது; இப்பால் இயற்றியவரால் இடையிடையே சில புதிய பாடல்கள் சேர்த்தும் திருத்தியும் புதுப்பிக்கப்பட்டது; சென்னைமாநாண யுத்தப்பிரசாரசபையாரால் நன்குமதித்து ஸ்ரீ. ராவ்பஹதூர் ராமன் பொற் பரிசு வழங்கப்பெற்றது.

3 பூத பவுதிக நூலிற்—பற்பல்
புலத்துறை முற்றும் நலத்தால் நிலத்தை
ஆதர வோடர சாளார்—உள
ஆற்றலி னுல்நெடி தாள நினைந்தார். (நாசிக்)

4 உலக மெலாம்தம தாக்க—இவர்
உள்ளம் உரைசெயல் ஒவ்வாது நின்றார்
நிலவுல காண்டிடும் மன்னர்—பலர்
நெஞ்சு புழுங்க நிலங்கொள்ளை கொண்டார். (நாசிக்)

5 நாடு பிடிக்கும் நினைவால்—இந்த
நாசிப் படையெழ வேபல நாட்டார்
நீடு சுதந்தரம் நீங்கி—யின்று
நெஞ்சு கலங்குற நிற்பது காணீர். (நாசிக்)

6 போலந்து நார்வே டென்மார்க்கும்—இந்தப்
புவிபுகழ் ஆலந்தும் பெல்ஜிய நாடும்
மேலிந்த நாட்டுச் சுவர்க்கம்—என
விள்ளும் பிரான்சும் விழுந்தது காணீர். (நாசிக்)

7 போரில் எதிர்ந்தவர் சாயப்—பொரும்
போர்வலி யின்றியிப் புன்றொழில் நீசர்
போரறி யாத சிறுரும்—உயிர்
[1] பொன்றக் கொடுமை புரிவதுங் காணீர். (நாசிக்)

8 விண்பால் விமானத்தில் நின்றும்—வெய்ய
வேலையின் ஆழத்துக் கப்பலில் நின்றும்
பெண்பாலவர் இளையார்கள்—அஞ்சும்
பேதையர் நோயின ரென்றுமெண் ணாமல். (நாசிக்)

---

[1] பொன்ற - அழிய.

9 பீரங்கி யேமுத லான—வெய்ய
பீடை தரும்படை யாவையுங் கொண்டு
[1] வாரம் சிறிதும் இலாதே—[2] தெறும்
[3] வன்கண்மை யேயுரு வாக அமைந்து. (நாசிக்)

10 மன்படைக் காவல் இலாத—நாட்டும்
வாழும் உயிர்கள் மடிந்திடச் செய்வார்
வன்பகை வர்திறத் தன்றி—இந்த
மண்மிசை யார்க்கிவர் நல்லவ ராஞர். (நாசிக்)

11 ஆற்றலில் நாசி யரக்கர்—வஞ்சம்
ஆற்றிச் சிலர்தம் அரசு கவர்ந்தார்
தோற்றவர் ஊணின்றி வாட—அவர்
[4] துப்புர வாயின சூறையிட் டுண்டார். (நாசிக்)

12 பித்தர்க ளாகிய நாசி—நீசர்
பெய்யும் எரிவெடி குண்டுக ளாலே
எத்தனை சாலை அழியும்—அன்றி
எத்தனை சோலை எரிந்து கரியும். (நாசிக்)

13 எத்தனை ஆருயிர் மாயும்—பின்னும்
எத்தனை யோவிளை வாயின தீயும்
எத்தனை சித்திர சாலை—மற்றும்
எத்தனை நற்றொழிற் சாலைகள் ஓயும். (நாசிக்)

14 எத்தனை வித்தியா சாலை—மேலும்
எத்தனை வைத்திய சாலைகள் வீழும்
எத்தனை நர்த்தன மன்றம்—மன்னும்
எத்தனை சத்திரம் வீழ்ந்தழி வெய்தும். (நாசிக்)

---

[1] வாரம் - அன்பு. [2] தெறுதல் - அழித்தல். [3] வன்கண்மை - குரூரம்.
[4] துப்புரவு - உணவு.

15 எத்தனை புத்தகசாலை—இன்னும்
எத்தனை வர்த்தக சாலைகள் சாயும்
எத்தனை சர்ச்சுகள் வீழும்—நித்தம்
எத்தனை [1]கோயில் இடிந்தெழில் வீயும். (நாசிக்)

16 எத்தனை [2]மானம் அழியும்—அன்றி
எத்தனை மானத்து வீரர் இறப்பார்
எத்தனை கப்பல்கள் ஆழும்—மற்றும்
எத்தனை கப்பலிற் பண்டங்கள் தாழும். (நாசிக்)

17 எத்தனை பாலம் தகரும்—மேலும்
எத்தனை மூல பலந்தொலை வெய்தும்
எத்தனை நாடழி வெய்தும்—நிதம்
எத்தனை மாநகர் பாழ்பட் டொழியும். (நாசிக்)

18 எத்தனை தொண்டர்கள் மாள்வார்—பின்னும்
எத்தனை நற்குரு மார்பொன்றி வீழ்வார்
நித்தம் இவர்பகை யின்றி—நடு
நின்றவரும் இடர் நீங்கிய துண்டோ. (நாசிக்)

19 எத்தனை நாளிவ் வரக்கர்—செயும்
இன்னல் உழந்திவ் விருநிலம் எங்கும்
எத்தனை மக்கள் இறப்பார்—என
எண்ணின் இதயம் இடிந்துகு மன்றோ. (நாசிக்)

## II. ப்ரிட்டிஷார் தலையீடும் வெற்றிவிளைவும்.

20 அந்த அரக்கர் பலத்தால்—நிலம்
அல்லலுறாமல் அளித்திட வென்றே
சொந்த நலங்கரு தாது—[3]துணை
சோர்ந்துபின் [4]மாற மனந் தளராது,

---

[1] கோயில் - அரசமாளிகை. [2] மானம் - 1. விமானம், 2. பெருமை.
[3] துணை - நேசநாடாகிய பிரான்ஸ். [4] மாற - பகையொடுசேர்ந்துகொள்ள.

21 வெந்திறல் நாசிக ளுக்கே—துணை
மேன்மையில் பாசிசப் பேய்செயல் கண்டும்
சந்ததம் மற்றவர் ஏங்கத்—தனி
தாக்கிடும் ஊக்கம் மிகுத்தவ ராகி,

22 மற்றவ ரோடு மலேவார்—சிங்க
வான்கொடி கொண்டப்ரிட் டானிய வீரர்
[1] செற்றம் மிகுந்த மனத்தார்—இவர்
சீர்த்துணை மேற்றிசை நாட்டிலும் உண்டே.

23 வேற்றி யடைந்திடு வாரே—இவர்
மேன்மை யடைந்து விளங்கிடு வாரே
சற்றும் ஐயப்பட வேண்டா—இது
சத்தியம் சத்தியம் சத்தியம் கண்டீர்.

## III. இந்தியர் கடமை.

24 நாசிக் கலிபுக லாலே—பிற
நாட்டினுட் பற்பல தீங்குறக் கண்டும்
பேசிப் பொழுது கழித்தல்—நலம்
பேண விலாதவர் பெற்றிமை யன்றோ!

25 வாசலில் வந்த பகைதான்—முற்றம்
வந்து மலேந்திட எத்தனை போதாம்
நாசிகள் தீச்செயல் என்றும்—இந்த
நாட்டுள் வராதென நாட்டலும் ஆமோ!

26 நாசிக் கொடுமை தொலேயத்—துணை
நல்கு கெனநமை ஆள்பவர் வேண்டில்
தேச சுதந்திரம் நல்கில்—துணை
செய்வமென் பாரிது செப்பலும் ஆமோ?

---

[1] செற்றம் - சினம்.

27 வீடெரி யுண்டிடக் கண்டும்—புனல்
வீசிப் பொழிந்தழல் வீட்டுத லின்றிக்
கூடி யதிற்குளிர் காய்ந்து—சுகம்
கொள்ள நினைதல் குணமென லாமோ.

28 நாசிகள் தீச்செய லாலே—நந்தம்
நாட்டினுக் கின்னல் வராவகை காக்கும்
ஆசை யுமக்குள தென்னிற்—ப்ரிட்டி
ஷார்க்கின் றுதவி யளித்திட வேண்டும்.

29 நன்று புரியும் அமயம்—இந்த
நாள்போ லினியரி தின்றுநம் வேந்தர்
வென்றி யடைந்திடு மாறு—மிக
வெண்பொன் வழங்கி விழுப்புகழ் கொள்வீர்.

## IV. சென்னைமாகாணத்தின் பெருமை.

30 என்றும் அரசர் திறத்தே—நலம்
எண்ணி யியற்றி யிசையொடு வாழும்
தென்றமிழ் மாநில மாகுஞ் சென்னை
செப்பற் கரிய புகழுடைத் தன்றோ!

31 ஆன்ற விமான நிதிக்கே—மிகும்
அன்புட னே [1]எண்பத் தைந்துலக் கம்போன்
தான்தந்து பேர்கொண்ட தன்றே—இதிற்
சான்றினி வேறென்ன கூறிட வேண்டும்.

32 தூயசு தந்தர நீங்கிப்—பிறர்
துன்ப முழந்து சுழன்று பசிக்கோர்
வாயுண வின்றி மெலிந்து—நாளும்
வாடவும் உண்டு மகிழ்ந்திருப் போமோ.

---

[1] இத்தொகை இஃ தியற்றப்பெற்றகாலத்துச் சேர்ந்திருந்தது. அது இப்போது இரண்டுமடங்காயிருக்கிறது, மேலும் மிகும்.

33 நாசிச மென்ற்ெரு தீயும்—அதை
நண்புகொண் டாடிடும் பாசிசப் பேயும்
காசினி முற்று மழிக்க—அது
கண்டு மனமகிழ் கொண்டிருப் போமோ.

34 நாசி யரக்கர் மடிய—இந்த
நாடு புவியிற் பெருமை யடைய
நேச முடன்படை வீரர்—நிதி
நித்தநித் தந்தந் துதவிடு வோமே.

## V. பிரார்த்தனே.

35 நாசிக ளோடியல் போரிற்—சில
நாளில்நம் வேந்தர் பிரான்வெற்றி சூட
ஆசில் அருள்புரி கென்றே—இறை
அந்தண் மலர்க்கழல் சிந்தைசெய் வோமே.

வேறு சந்தம்.

36 பத்துத் திசையும் ப்ரிட்டிஷ் வீரர் பாய்ந்து சூழவே
பித்த ராய நாசி நீசர் பெருமை யழிகவே.

## VI. வாழ்த்து.

வேறு சந்தம்.

37 வீழ்க கொடிய ஹிட்லர் வீழ்க வீழ்கவே
வாழ்க வுலகம் யாவும் வாழ்க வாழ்கவே

வேறு. (விருத்தம்.)

38 வீழ்க நாசிச வெங்கலி வீறழிந்
தாழ்க பாசிச அந்தகர் கூட்டமே
வாழ்க ப்ரிட்டிஷ் மகிபர் மதிக்குடை
வாழ்க வாழ்க மகிதலம் யாவுமே.

---

ஸ்ரீ:

# மங்கள வாழ்த்து.*

பொன்னுட்டுப் புரந்தானும் புறங்காட்ட
மறங்காட்டிப் பொருது வென்ற
தென்னுட்டுக் கயற்கொடியும் அமெரிக்கர்
திறற்கொடியும் சீர்த்த மேலே
நன்னுட்டுப் புகழ்மிகுபிரிட் டானியர்யூ
னியன்கொடியும் நாளும் ஓங்க
எந்நாட்டும் இகல்நீங்கி யுலகுபுரந்
தாசர்குழாம் என்றும் வாழி. (1)

சென்றசென்ற முனைமுகத்துத் தெவ்வேந்தர்
திறலழிந்து செயல்கெட் டோட
வென்றுபுனை வாகையொடு புலவர்புகழ்
மாலைபல விளம்பு மாறு
நின்றபிரிட் டானியரீ ணிலவேந்து
நிகழ்நாசிப் பகையும் வென்று
நன்றுலகு களிகூரப் புரந்துதிரு
மால்போலெந் நாளும் வாழி. (2)

வாழி செழியர் வளநாடு மதுரை ஜில்லா இனிதாண்டு
வாழி ஜே. ஆர். பேட்டென்னும் மன்னு புகழ்சேர் துரைமகனர்
வாழி ஆருவது ஜார்ஜூ மன்னர் பெருமான் நீடூழி
வாழி யுலகு பகைநீங்கி மழையே முதலாம் வளமுற்றே. (3)

சுபம்

---

* இது, மஹாயுத்தம் தொடங்கி இரண்டுவருஷமானதுகுறித்து மதுரை வையை மையமண்டபத்தில் 3-9-41-ல், மதுரை யுத்தப்பிரசாரக் கமிட்டியார் நடத்திய கொண்டாட்டத்தில் பாண்டிய அமெரிக்க பிரிட்டிஷ் கொடிகள் உயர்த்தப்பெற்ற அமயம், மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழுதவிப் பத்திராசிரியர் T. K. இராமாநுஜையங்காரால் இயற்றிப் படிக்கப்பட்டது.

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 2. | கணநூல் (5) இனியநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) .. | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சன தீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் ... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷெ) ... ... | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை ... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... ... | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | *அகப்பொருள்விளக்கம் ... ... ... | | | |
| 35. | *திருமந்திர நூறுபாட்டுக்குரை ... ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையவுரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | *மதங்கசூளாமணி ... ... ... | | | |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு .. ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தாஞ்ஜலி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்“செந்தமிழ்”ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாத தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக் கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.